

இலாஹி

பிஸ்மில்லாஹிற்றகுமானிற்றகீம்

நாயக மறுசோதய மிரஞ்சித

பதகீர்த்தனாமிர்தமென்னும்

# பதானந்தக் கோர்வை

இஃது

பாண்டிவளம், திண்டுக்கல் தாலுக்கா

இலப்புறம் முஸ்லீம்களின்

வேண்டுகோளின்படி

---

திருசிராபுறம் உரையூர் பாளையம்பஜாரிலிருக்கும்

சையதிமாம் சாயபு அவர்களால்

இயற்றப்பட்டு

---

திருச்சிராப்பள்ளி

ஸ்ரீ கிருஷ்ணவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] [அணா 6

1915

பிஸ்மில்லாஹி

## சிறப்புப் பாயிரம்.

இது

முஹம்மதியபல உயர்தர கிரந்தக் கர்த்தாவாகிய
பாண்டிமண்டலம், செவ்வல்மாநகரம்
மஹாவித்துவான் ஸ்ரீலஸ்ரீ
**எம். ஏ. நெயினு முகம்மதுப் பாவலர்**
சொல்லியது.

---

### ஆசிரிய விருத்தம்.

உலகனைத்து முளுற்றியவோம் பொருமுதலோன்
றன்னருள்வேட் டுறும்பாவுஞ்சீர்
இலகு முகம்மது நயினர் மிஃருஜியின் சரித
மிலங்கக் கீதம்
பலவன்னக் கீர்த்தனத்துந் தோத்திரத்தும்
பகிரட்டிப் பயோதரம்போல்
நலனுறவே பொழிந்திட்டா னதனினிமை
நற்புலவீர் நவில்வாங்கேண்மோ.

கரும்பு தரும் பால்தருமுக் கனிதருங்கற்
கண்டுதருங் களிவண்டூத
அரும்புதரும் போதுதரும் புதுநறவுதரு
மிரச மனைத்துங் கைப்புத்
தரும்புதருந் தமிழுலகு முநிவாரு மறத்
தெளிந்த சான்றோர் யாரும்
விரும்புதரும் பெரிதுபுகழ் தருமவனை
யாமெடுத்து விளம்புமாலோ.

துதிகாட்டுஞ் சந்த்ர திலகாடவி வெற்பமர்
முனிவன் றெருடுத்த ஐந்து
விதிகாட்டு மிலக்கணத்தை யிலக்கியத்தைக்
கடைபோக விளங்கக் கற்றோன்
மதிகாட்டுஞ் சுடர்வதன வொளிகாட்டுந்
திருமுகத்தோன் வல்லோனென்
றெதிர்காட்டு மஞ்ஞான வகந்தையிலா
மெஞ்ஞான னிலையில் வித்வான்
சுந்தரப்பொன் வண்டினங்க டேனுண்டு
நிர்த்தனஞ்செய் சோலைதோறும்
மந்தியது கலவிபயில் காவேரி திருச்சிநகர்
மருங்கெஞ்ஞான்றுஞ்
சந்தன பாளிதங்கமழும் வீதி உறையூர்வந்து
தழைத்தோன் ஞானச்
சிந்தை யொளிர்தரும் சையதிமாமு சாகிபு
வெனுஞ் செந்தமிழ்க் கோமானே.

இச்சிறந்த பிரபந்தந்தனை யரங்கேற்
றச்சிட்டா னெவனேல் பாண்டி
வச்சிரம்போல் வருதிண்டுக்கலை யடுத்த
சூலப்புர மாணிக்கம்போல்
முச்சகம் போற்றவ தரித்த கொடையாளன்
புலவர்கள் வாய்முழங்குஞ் சீர்த்தி
பச்சைமரகதம் போல்வான் ஷேக்கிசுமாலென்ற
புகழ்படர் பூமானே.

---

இஃது

இந்நூலாசிரியராகிய சையதிமாம் சாயபு இயற்றிய
எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அலைகடல் விசும்பு வறுசுடன் குருசு
வழகிய லௌகுமா கலமும்
மலையனல் வாய்வுமதி கதிர்மேக
மண்டல மனைத்தையும் வகுத்து
நிலைபெற நான்கு பிறவிகளாயும்
நிகழ்த்திடு மெழுவகைத் தோற்றம்
பலபொருள்யாவு மொரு மொழியாலே
படைத்திடு மிறைவனைப் பணிவாம்.

இதுவுமது

ஆதிதன்னொளி விலகுமதா யுதித்த
வண்ணலே மதினமா நகரச்
சோதியே யிறசூல் முகம்மதுக் கனியே
சுகம்பெற வறுசினி லேறி
சேதிகள்பலது ஹக்குடன் பேசித்
திரும்பிய வுன்புகழ் தனையே
ஓதிடநினை யென் னிருதயத்தேற்றி
யுன் னிருதாட் பணிந்தேனே.

இதுவுமது

கானகத்திடையிற் சிறகதை விரித்துக்
களிப்புடன் மயில் நடமாட
தானதுபோல நடித்த வான்கோழி
தகைமையைப்போ லறி வமையான்
பானலமொழி கொள்ளரும்பெரும் புலவர்
பகர்திருப் பிரபந்தத் தெதிரே
தானமைத்த தெனக்குறை நிறைவாக்கி
சமரசப்படுத்துவர் சான்றோர்.

சிங்காரப்பஞ்சவன்ன கிள்ளைகாளென்ற வருணமெட்டு,

———

இராகம்—நாதநாமகிரிகை—ஆதிதாளம்.

சிங்கார மாமுகம்ம தண்ணலார்—திரு
சித்தர்புக ழுத்தமராங் கத்தனொளி மின்னலார் (சி)
திங்களிரவில்மிகு ராஜதை காண்பதற்கு
சென்றத் திருவசன மானதை எந்தன்
சிந்தைமகிழ் சிந்தைமகிழ் சிந்தைமகிழ்ந்தே சொல்வேன்
வந்துநீரே ரெந்தநாளுஞ் சிந்தைமகிழ்ந்தே கேட்பீர்
சிங்காரமா முஹம்மதண்ணலார் திரு

சித்தர் புகழ்.

ஹக்கநபியோ ரிர வானதில் அரபாத்
தம்மலையில் நன்மைபெற வுண்மை நித்திரை செய்ததில்(ஹ)
தக்கஜி புரைஹிலும் வந்திட சற்சனருந்
தானுந் தன்னித்திரை கலைந்திட அன்று
தங்கமயந் தங்கமயந் தங்கமயம்போல் வானோ
ரங்கிருக்க சங்கைநபி மங்களமுடன் கண்டார்
திங்களிரவில் நபி யண்ணலார் திரு

சித்தர்புகழ்

அப்போ திருளு மின்னலாகவே இடித்
தண்டமதிற் கொண்டலது சண்டையிட் டிடியவே. (அ)
செப்புமுலக ஜீவராசிகள் யாவு நித்திரை
செய்ய வரவமில்லா வேளையில் நல
தேஜசிட தேஜசிட தேஜசிடவே வானோ
ராசையுடன் வாசர்நபி ராஜருக்கிட்டார் சலாம்
சிங்காரமா முஹம்மதண்ணலார் திரு

சித்தர் புகழ்.

அன்றுசலாம் பதிலுஞ் சொல்லியே வான
வர்நூத லின்னல் வரியிரண் டெழுதியதையே (அன்று)
கண்டார்முதற் கலிமா தன்னையே யவர்சிறகை
விண்டார் மரகதமென்றெண்ணவே உள்ளோர்
கண்டுநபி யண்டையிலே சென்றுவிறையோன் உமைக்
கொண்டுவர விண்டானென வண்டருரை கேட்டவர்
சென்றார்ஜிபு ரைஹிலோ டண்ணலார் திரு

சித்தர்புகழ்

மலையர பாவதையுந் தாண்டிட அங்கு
வானோர் மீக்காயி லுமேதா னெதிர்த் தோன்றிட (மலை)
விலைமதியாத புராக்கானதை றாக்காயில்கொண்டு
வேகமுடன் வந்திடலானதே வெகு
விந்தையுடன் விந்தையுடன் விந்தையுடனே நபி
யந்தமுடன் வந்த பரியுந் தகுதியென் றெண்ணி
சென்றே றிட முகம்ம தண்ணலார் திரு

சித்தாபுகழ்

படியைஜி புரைஹிலும் பற்றினார் வெகு
பக்குவமாய் மீக்காயிலும் றூக்காயிலுஞ் சுற்றினார் (படி)
வடிவாயப்படி தாங்க மீக்காயில் பின்புறத்தில்
பிடியாகி னாரழகாய் றூக்காயில் திரு
வள்ளல்நபி நல்லபுராக் குள்ளதிலேற அது
அல்லலுற வில்லிடந் தரவுள்ள தாகாமற் றாரச்
செல்லநபி முகம்ம தண்ணலார் திரு

சித்த்தர்புகழ்

அப்போ தமரர்புராக் கானதை நோக்கி
யாதுவிதமோ துமெனக் கோதறச்சொல் லென்றதே (அ)
செப்புங்கியா மத்திலு மெந்தன்மேல் ஏறிநபி

செல்லும்படிக் கருளு மென்றதில் வாக்கு
செப்பியபின் ளுைப்பியது சிற்பாரடி தொழ
வப்பொழுது விற்பன்னரே றப்பரியுமே தீன்
தீன் தீன் முகம்மதென வண்ணலார் திரு

சிந்தர்புகழ்

அசுவம்நபியை முதுகேற்றியே முன்னே
ராருமென்முதுகிலேற வில்லையென்று மேத்தியே (அசு)
கசிவாயசுவம் பல தோதிட ஜிபுரைஹிலுங்
கண்டுவாய் பேசாதென வோதிட பரிக்
கண்டுநல தென்றுசெல வன்றுவானவர் புகழ்ந்
தண்டர்பதி விண்டிடவே நன்று ஹதீதை கேட்டு
சென்றார் நபி முகம்ம தண்ணலார் திரு

சித்தர்புசழ்

ஏகும்வழி யோர்மலே கண்டிட் அதி
லேகனரு ளானோர்தஸ்பீ கோதிபலர் வந்திட் (ஏகு)
ஏகன்ஜிபு ரைஹிலு மவ்விடம் புராக்கைவிட்
டிறங்கி நபியைத் தொழ வுந்திடம் சொல
வின்பமுடனுந் தொழுக வம்பருமே நபிக்
கும்புகல்வ ரின்புபெற வன்பர்மூசாவின் ஹரி
சினுவென முகம்ம தண்ணலார் திரு

சித்தர்புகழ்

ஹக்கன்மூசா வக்கொளி கண்டிடச் செய்த
வம்மலேவிட் டேகிவயல் செம்மையுடன் கொண்டிட (ஹக்க)
தக்கஜி புரைஹிலு மங்கணம் அற்புதரைத்
தன்மையுட னிறக்கி பிற்கணம் உள
தற்பரன்றன் நற்றொழுகை செப்பியே தொழு மென
வப்படிச்செய் துற்பனருஞ் செப்பிடமிதை என்
றுதித்தார்பரி முதுகி லண்ணலார் திரு

சித்தர்புகழ்

பீலிமறிய மீசா தன்னேயே அன்று
பெற்றெடுத்த வித்தலமென மெத்தச்சொன்ன வன்னேயே (பீ)
தாவிபிட வலமதாகவே பெண்ணொருத்தி
சப்தமிட் டழைத்தா ளன்பாகவே யந்த
சப்தமதை முத்தர்நபி யுற்றிடாமலே வானோ
ரத்தருண முத்தரவ ளித்தவிதமே நபி
சென்றூர்பரி நடத்தி யண்ணலார் திரு

சித்தர்புகழ்

பொன்னுமுத்தா பரணஞ் சூடியே மோகம்
பொங்கிய வளங்கமெலாஞ் சங்கையிலா தாடியே (பொன்)
முன்னொருத்தி வந்தென்னேப்பா ரென்றிட அன்றுநபி
மூதேவியைப் பாரூது சென்றிட பின்பு
மூன்றுபெய ராங்குவர மூன்றுவிதமாய் வய
தாண்டுநடு பூண்டவரு மோங்கியே சலாமிட
சென்றூர்பதி லுரைத்து வண்ணலார் திரு

சித்தர்புகழ்

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

முதுகுகோ வேரு முகமது மனிதர்
முதிர்குணம் புலியின் நெஞ்சானே
யதுவடிகாலாம் வெண்மை மேனியும்வா
லானதுமா டவையவமே
இதுநுதல் மாணிக்க மிருகண்ணி
னிடைகலிமாவு மெய் மூக்கு
முதுகு வைடூரியஞ் செவி பச்சை
முருகுளப் பரிசெலும் வழியே

வேறு வருணமெட்டு.

அப்புறஞ்செல்லப் பசுவை சற்பனேசெய்
தன்று ஏன்கு கூறதாய் அதி
லஸ்தியொன் றிரச்சியு மொன்றூனதாய் இன்னு

மடருமுதி ரங்குடலுஞ் சாண
மொடுதோல்வால் நரம்புடனு மொன்ற
திரகால்வரு மேடுத்துச் சென்றிட நபி
யூகமா யவிடம் விட்டகன்றிட

ஏகும்போதோர் சேவல் மலைபோலவே
கொம்பானது முள்ளாகவே முளைத்
தெதிர்படக்கண்டார் நபி யேகவே—மண்ணி
லெந்தவிதமாய் வந்தததுபோ
லந்தவிதமா யுந்தான் புகுத
வேலாதிருந்ததுவும் பார்த்திட நபி
மேலாயேகிடப் பரி சேர்த்திட

கண்டு வப்புறஞ் செலவே
யன்றுகா வொன்றுன தெதிர்க்கொண்டன ரதிற்
காளேயோடு வாடுமாடுங் கண்டனர் அது
கவலேயோடு தவன மாயும்
வயிர தொட்டிச் சவம்போலாகக்
கண்டுவப்புறஞ் செலவோர் மைதானந் தனைக்
கண்டாரேநபி பெருமானுந் தானம்

அங்கோர்வழி மீதாடு மாடும்பல
ஜீவர்கள் செழிப்போங்கிடக் கண்
டப்புறஞ்சிலர் பயிர்செய்து நட நட்
டப்பலந்தனை நற்பசிக் கிட
நற்பிலாதவ ரற்புதந் தனை
யங்கறிந் திறையவனைப் போற்றியே யதற்
கப்புறஞ்செல வோர் மாடநேத்தியே

கண்டாரது பைத்துல்மு
ஹத்தீசுப்பள்ளியதை யண்டிட புராக்
கானததையும் விட்டிறங்கிட நபிக்
காலடிப்பள்ளி வாசலில் வைத்த

போதொருகல்லு வோதிட சத்தங்
கண்டன் றடியெடுத்து நன்னபி சத்தங்
கொண்டதென்ன வென்றிட முன்னபி

அத்தருணங் கல்லறு பத்துநா
ருகவேகான் செய்பவம் தனை
யாரு மகற்றவிலை யேநயம் அது
ஆகுமுன்னடி வாகுடன்பட
வேகியேநய மாகினே னென
வங்கு புகழநபி சென்றிட வுள்ளே
தங்கும் பரியைவானே ருந்திடம்

ஆக வொருதூணிலன் பாகவிரலாற்றுளைத் தந்திடம் பரியை
வாகாய் கட்டியேநபி யாரிடம் சென்று
வாங்கதுகூற வோங்கியே விண்ணோர்
பாங்குடநபிக ளாங்குவோர் லெட்ச
மாக விருபத்துநா லாயிரம் முருச
லீங்கள் முன்னூற்றுபதி மூன்றதாம்

முருச லீங்களுமற்ற முள்ள வன்பியாவொலி மார்களும் நபி
முன்னே காணவெதிரொல லோர்களும் வந்து
முன்சலா மோதி பின்புகொண்டாடி
யன்புடன்பாலத் துன்பமதை விட்
டகற்றும் நபியைத்தொழு வியுமென் றெல்லோ
ரன்பா யுரைக்கநபி யாரும்பின்

ஆத நபியையுகந் தோதுந் தொழுகைதொழு வியுமென் றங்கு
வால நபியுமுரைத் தாரதின் பின்பு
வாதநபியு மோடுமனைவர் போதமுறவே காதல்கொண்டோ
மானதால் நாயக முகம்மதே இமா
மாக நிற்கவேண்டும குமதே

இந்தப் படியுரைக்க வந்த விதமேநபி நாயகம் இமா
மாக விருந்துதொழு தேநயம் பெற
வேகனிடமன் பாகதுவாக்கேட்
டாகியபின்ப னேகமுடித்து
வின்ப முடனிருக்கும் வேளையில் வானே
ரேகி வந்தனரந்த நாளையில்

வந்து ஜிபுறாஹிலு முந்த வனத்திற்கண்ட விந்தையை எடுத்
தந்த முடனுரைக்கச் சிந்தையே கொண்டு
வலமிடமாக முழங்கிய சப்த
மெகுதிகளாகு மெனநபிக்கோதி
வாகா யிடையில்வந்த கள்ளியே கெட்ட
வண்ட னிபுலீசெனுஞ் சொல்லியே

கள்ளி யிடத்திற்பேசாத் தள்ளி வந்ததுநல மாகும்பார் என்று
ககன ருரைத்துப்பின்னுங் கூறுவார் அவளைக்
கண்டுரைபேச வுன்டெனவாறு
லுன்றன்னடியார் சென்றிடுவார்தீக்
காளா கவேயிறைவ னுக்குவான் என்று
மேலோ ருரைத்தார்நபி யார்க்குமுன்

## எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

---

நாயக நபியுஞ் சிபுறாஹி லோடு
நணுகிட வறுசதைக் கருதி
தூயவ னருளும் புராக்கதி லேறி
சுகுணரு மனமது மகிழ
சாயலும் பெருக மணமொரு காதந்
ததும்பிடப் பள்ளியி லிருந்து
நேயமா யுதித்த பலவதி சயமும்
நிகழ்த்திட ஜிபுறாஹி லன்றே

## இராகஞ் சுருட்டி ஏகதாளம்
## பண் வருணமெட்டு.

திருநபியே திருநபியே செம்மலிற சூல்நபியே
குருநபியே குருநபியே குணங்குடிகொண்டநற் றிருநபியே

திருநபி

இதுவிதம் வனமதி லுறுவசை யெனமொழிந்
தியம்பிடு வார்மறு சப்தமதை
யதுநர கினிலொரு மனிதன்மே லெறிகல்
லாகுமென் றறிந்திடு வாய்நபியே

திருநபி

மூன்றுபேர் வந்துச லாமுறைத் தவறிலும்
மும்மாத் தோரதில் வாலிபர்க்கு
மீண்டுஞ்ச லாம்பதி லோதிடத் தவரின்முன்
மாண்ட மனுநர காகிடுவார்

திருநபி

பசுவதை புரிந்தநான் வகுப்பின ரொருதியும்
பகரும ஜூசியென் றறைந்தினும்
நஸ்ராணி யொருவன்னன் னிரச்சியை நாடினோ
னசல்சுவர்க் கவிருப்ப முடையவனும்

திருநபி

வந்திடுஞ் சேவல்கொம் புடனங் கயர்ந்தது
மாற்கநற் புத்தியை மறந்தவனே
நொந்திட கொடியதுற் புத்தியைக்கொள்ளும்
நோக்க முளதிரு டன்னவனே

திருநபி

மறுவழி தனிலெதிர்க் குளிர்ந்தநற் காவும்
மனிதரும் பயிர்செய் தவர்பசியால்
குறுகினே நற்செயல் மறந்துதுற் செயலதைக்
கூடினே னென்றனர் மாநபிபால்

திருநபி

கொதித்திடுங் கானகத் துள்ளேநற் செழிப்புடன்
குறைவிலா திருந்ததுந் துற்செயலே
மதிப்புட னகற்றிநற் செயலெடுத் தவரென
வானவ ருரைபுகன் ருர்நபிக்கே

திருநபி

அன்றுநட் டன்றரு வடைசெய் துண்டவ
ராரொன வறிநபி யெனவுரைத்து
வென்றிடும் பீசபீல் செய்தெழி யோர்களை
விரும்பியே யொசிபனந் தனையளித்தோர்

திருநபி

பலவதி சயமுறை ஜிபுறாஹில் மறைந்திட
பைத்துல்மு கத்திசுப் பள்ளியதில்
உலகனைத் தும்படைத் தாளிறை தனைத்தன்
னுட்புகழ்ந் திருந்திடும் வேளைதனில்

திருநபி

வெண்பா.

---

ஆலநபியு மாதநபி மூசாவும்
பாலரீ சாவும் பகர்ந்திருக்க—கோலமுடன்
ஜிபுறாஹில் தன்கூட சிறந்தங்கவர் தமக்கு
தபக்கான தேந்திவந்தார் தான்

## மூன் வருணமெட்டு.

தபக்கதை நபிதிறந் திடவதிற் கண்மது
தண்ணீர் பாலிருந் ததையறிந்தே
சுபமுடன் பாலெடுத் தருந்தியு மீந்ததை
ஜிபுறாஹில்க் களித்திட மனமகிழ்ந்தே

திருநபி

மலக்கதைக் கரமதில் வாங்கிநன் னபியிடம்
வழுத்துவா ரோர்மொழி யதுசமயம்
சிலதுபா லருந்தாது வெனக்கிட்டீ ருன்னுமத்
தினிற்சிலர் நரகதிற் படும்விசயம்

திருநபி

எனவுரைத் திடஜிபு றாஹில்நபி செவியுற
வீந்ததைத் தாவென வேமறுக்க
முனமதை லௌகுக்கு ளெழுதிய படியாகு
முடியா தினித்தரோ னெனவுரைக்க

திருநபி

உரைத்தபின் னங்குளநபிகட் கேசலா
முரைத்து நன்னபி ஜிபுறாஹிலும்
விரைந்தெழுந் தேகவோர் புலியது வாய்பிளந்
தெதிர்த்திடக் கண்டன ரிருவர்களும்

திருநபி

கண்டதை நபிமனங் கலங்கிட ஜிபுறாஹில்
கணயா ழியதின் வாயிலிட
விண்டது போல்நபிக் கரமதின் மோதிரம்
வீசிட வாயிற்கொண் டதுசெலவே

திருநபி

சென்றபின் னிருவரு மேகும்போ தோர்மலைத்
தெரிந்தே றியவ் விடம்பார்க்க
கண்டனர் மலக்குகட் சுஜூதுவிற் றஸ்பீகு
கழறிய தைநா யகம்பார்க்க

திருநபி

பார்க்கரக் காயத்தி ரண்டதைத் தொழுமென
பகரிய ஜிபுறாஹில் மலைக்குதடில்
நோக்கியோர் சப்த மிடவது வெனவெனில்
நோட்டமுன் வான மலக்குகளில்

திருநபி

வானம லக்குகுருக் காயில்ஹூ ராயிலு
மாய்மிகு ராஜதி னேணியதைத்
தானவர் கொண்டு வரும்படி யாமன்று
வானவ ரெண்ணு யிரங்களதை

திருநபி

கனகமோ டாணிமுத் திலங்குஞ்சு வனத்திற்
ககனர்சென் றேணிய தைதூக்கி
மனமகி ழாங்கிறக் கிடச்சிவந் திடும்பொன்
னினமெனு மிருநிலை யதிற்ருக்கி

திருநபி

இருந்திட வைம்பத் தைந்து படியது
விலங்கிடு மரகத மேற்படிமே
லிருந்தோர் படிக்கோர் படிவ ருடனா
றெனுந்துலை யாம்படி யழகிய சொல்

திருநபி

நீலம ரகதமுத் தாருமி ரண்டதின்
னிகழ்த்தும்பொன் னேடுப வளமடுத்து
போலமற் றுளபடி யாவுமிவ் வகையாய்
பொருந்தக கனர்நபி தமைப் பார்த்து

திருநபி

வலதுகா லதைகுர்ஆன் ஓதிமுன் னேறெண
மலக்கெலா மாலாத் திகளெடுக்க
பலபடி களுனபி யேறிட மலக்குகட்
பார்த்தாங் காங்குது தித்திருக்க

திருநபி

இவ்வித மைம்பத் தைந்து படியு
மேகிட வாங்கோர் கடல்மீது
செவ்வையா யுயிரெலா மடங்கிடுமியல்பதிற்
றிருமலக் கொன்று வப்போது

திருநபி

மலக்கதி னடிபா தாளங்கீழ் சிரசு
வானறு சைமுட் டிடவதனை
விலகிட நபிமுத வானத்தின் வாசல்
விதமுடன் பூட்டிட மலக்கதனை

திருநபி

காத்துக்கொண் டிருந்தவப் பூட்டதின் மேற்றிரு
கலிமா வரைந்திருந் ததனருகிற்
பார்த்தோர் மலக்குசுக் மாத்தடி யுடனிற்க
பார்க்கநன் னபியத் தருணமதில்

திருநபி

வாசலிற் பெருமலக் கதுபெரு மலையெலா
மள்ளியங் கிபுலீசின் மேலெறிய
நேசமுடன் நபி கண்டாங் கேகிட
நிருபரின் பெயரொன வெனமொழிய

திருநபி

மொழியம லக்குகல் ஜிபுறாஹில் நபியென
மொழியவும் வழிதிறந் துட்செலவே
இழங்கதி ரொனமலக் கிடவல மெலாமூசி
யிட்டிட விடமிலா திருந்திடவே

திருநபி

செம்பொற் குருசின்மே லோர்மலக் கிருந்திட
செப்புதற் கரிததின் வலியாவும்
அம்புவி விண்ணெழு கடல்முத லவர்வாயி
லருந்திடக் கடுகதி னளவாகும்

திருநபி

அன்னவர் தமைநபிக் கண்டுரைத் திடசலா
மவரும் பதிலுரைத் தகமகிழ்வாய்
நன்னய மாயங் கிருந்திட வலபுறம்
நாயகம் நோக்கிட வேபிதமாய்

திருநபி

பசும்பொன் னிலங்குசிங் காசன மாயிரம்
பக்கமொவ் வொன்றதி லேயிருக்க
வசந்தவிப் பீட மார்க்கென நபியுமுன்
னும்மத் தோர்க்கென மலக்குரைக்க

திருநபி

மலக்குறை கேட்டுநன் னபியுனீ ரிங்கிரும்
வகையென்ன வெனமலக் குரைத்திடுமாம்
இலங்கிய விறைமுத வானத்தின் றலைமையா
யிருக்கவும் வானவர்க் கெலாமுதலாம்

திருநபி

முத்தகி னுலகைமைத் தொருநூறு மாளிகை
முன்னிருப் பதுமெவர்க் கெனமலக்கு
முத்தருன் பீவிகள் யாவர்க்குமாமிது
மொழியுமுன் சந்ததி யார்தமக்கும்

திருநபி

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வகுத்திடு மிறைவன் மாளிகை நூற்றின்
வகையதை மொழிந்திட மலக்கு
பகுத்தநம் மிறசூல் பார்க்கப்பின் னுலகம்
(1) பற்றிய விளக்கொளி போலும்
மிகுத்தநற் கிரியி லதுபெரி தாக
விருந்திடச் சேவல திறகு
தொகுத்தநன் முத்து வெனவிழி யதுவுஞ்
சோதியா மாணிக்க ச்சுடரே

இதுவுமது

காலது பவளஞ் சிரமது மூக்குங்
கருதிடு மரகத நீலம்
சிலமா யதுபின் சாமத்திற் றனது
சிறகினை விரித்தது கூவ
ஆலமே படைத்த வாதியைத் துதிக்க
வம்புவி தனிலுள சேவல
ஞாலத்தின் மனிதர் தமையெழுப் பிடுமாம்
நாயனி னேவலின் படியே

## லாவணி வருணமெட்டு.

### இராகம் செஞ்சுருட்டி ஆதிதாளம்

ஆலநபியீதெல்லாஞ் சீலமுடனறிந்து
வகன்றுவப் புறம்போக வாங்கொரு தேக
வடிவதாக—சருபந்தது—வழகு பச்சையுமாக
சீலமுடன்குப்பாய மவ்வண்ணமாயணிந்து
சிந்தைமகிழவலது புறம்பார்த்திடது
பக்கமுன்போலது பார்த்துமயங்கி
சிந்தை சலிப்பானதது (உத்தார்)
கோலம தனைக்கண்டு கேட்க—வானோர்
கூறுவா ராதமென்று மேற்க
ஆலத்துள் ளோர்களிட புறநா கதிற்செல
வகமது சலித்திருக்க வலமேசுவர்க்க
மதனிற்சுருக்க ஏகுவனைக்கண்
டகமது குளிர்ந்திருக்க (1)

ஆகுமெ னக்கேட்டவ ரருகில்ச லாமுனைக்க
வதர்க்கு பதிலுஞ்சொல்லியே
யழைத்துநபியை முத்தியிட்டிறையை புகழ்ந்துவாத
மன்றுச லவாத்தோதியே
வாகுடன் பரிமள மளித்து நபியைப்போற்றி
வல்லோன் றெழுகைக் குறிய
இமாமாய்செழிய நின்றிடமொழிய
வவ்வணநபி மகிழ்ந்துதொ ழுவித்தரிய (உத்தார்)
ஏகனிடத்திற்றுவாக் கேட்டு நபி
யேகிடவே யவிடம்விட்டு
ஆகுமி ரும்பகினு லாகுமி ரண்டாவானத்
ததிசயஞ் சொல்லொண்ணுது
பார்த்திடும்போது வங்குவப்போது ஏகியாநபி
யாங்கிருந் திடச்சாது

என்றுமீ ரெட்டுவய திலங்கு ஊபிக்ருச்சலா
மிட்டார்ந பியுமன்று வானபிகண்டு
பதிலும்விண்டு புகழவானோர்
ஏகனபி முன்னன்று
அண்டபி ரானைத்தொழ வன்றுவி மாமாகநின்
றமைத்துத்தொ ழவும்பேச்சு சொல்லிடவாச்சு
தொழுகைமூச்சு விடாமுடித்து
வகன்றார்வான மூன்றுச்சு (உத்தார்)
சென்றுயூ சூபுநபி தன்னை கண்டுத்
திரும்பவாங் கோர்குருசின் முன்னே
அன்றகண் டமுகங்கை
செம்பொன்பசுஞ் சருபங் தணிந்தமர்ந் திடப்பெரியர்
அருகிலொருவர் நின்றிடக்கனர் தமையுநபி
யாவரொன் றிடவுரைப்பார். (3)

தாவுது நபியுடன் றுனுஞ்சு லைமாநபி
தானெனு முறையறிந்து சலாமும்புரிந்து
நிற்பதையறிந்து நபியும்பதிற்
சலாஞ்சொல்லிப் போற்றிபுகழ்ந்து
மேவுஞ்சி புனாஹிலுங் கூவிந பியைத்தொழு
விக்கவு ரைக்கநபியும் அஞ்சிடவதையும்
கண்டிருநபியும் அறிந்துதொழு
விக்கப் புகழ நபியும் (உத்தார்)
கூவுங்கு யிலினங்கள் போலே நபி
கூர்ந்துதொ ழுகவைத்தப் பாலே
தாவரனிடத்தினிற் றனதும்மத் தோர்கள்பிழை
தனைப்பொருத் திடும்படியே துவாவின்வழியே
கேட்டபின்நபியே யவிடம்விட்டுத்
தாவரன் றாதர்துணையே (4)

கொண்டுமெங் களநபி சென்றுவிண் ணுன்கிடசெலக்
கூறுமா ணிக்கவடிவாய் படைத்தபடியாய்
காணவவ்வழியாய் கதிரவன்போல்
கூர்லீன்மார் களுமொளிவாய்
அண்டையில் நபிதமக் காலாத்தி களெடுத்து
வாதி மணியின்சுடரே அப்துல்லாபாலரே
யருமைச்சீலரே யெனப்புகழ
வாங்குதி ரும்பலோலரே (உத்தார்)
கண்டார்க ணகமுத்திஞலே நபி
காணவொ ருவரதின்மேலே
கொண்டவ டிபாதாளங் கூடிச்சி ரமறுசைக்
கொண்டுமுட் டியேமுகமும் நான்கதின் புரமும்
அமைந்த விதமும் அதிலோர்முகம்
கொடுந்தண லானவிதமும் (5)

ஓர்முக மொளிவிஞ லோர்முக மிருளிஞ
லோர்முகஞ் சலிப்பாக வலமதாக
மரமொன்ருக கனிகள்சொரிந்
துகந்ததி லேயனேக
சிர்பெரு மலக்குகட் சுகத்திலி ருந்தவரைச்
சூழ்ந்திடவு மிடதுகைப் புறமோர்பலகை
யெழுதினவகை யறிந்தீதெல்லாம்
செப்புமென் றிடநபியை (உத்தார்)
பார்த்துஜி புறாஹிலு மன்று சொல்வார்
பன்பா யிஷ்ராயிலுமென்று
ஓர்திரு மொழிசொல வுகந்துநபியுஞ்சலா
முரைக்கவ தற்குப்பதிலும் சொல்லாததாலும்
திரும்பமேலும் சலாமுரைக்க
சிற்பர னருளாலும் (6)

சப்தமிட் டிஷ்ராயில் சலாம்பதி லுரையெனத்
தலைமிர்ந் தகங்கலங்க பதிலுந்துலங்க
சொல்லியேவிளங்க நபிநாயகந்
தன்னை யருகி லிலங்க
வைத்துமு கம்மதுவை வய்யந்த னிற்ஹயாத்தை
வாங்கும்ப டிக்குநேர்ந்து அதினுற் சோர்ந்து
இருந்தேன்கூர்ந்து பொறுப்பீரென
வழுத்தநான் முகமுகந்து (உத்தார்)

உற்றதைக் கேட்கநபி யன்று மலக்
குறைப்பார்நபியின்முன்னே நின்று
சத்துரு வாங்குபிரா தன்னுயிர் வாங்குமுகந்
தனலாகும் பகிலருட வுயிரைவாங்கிட
சலிப்பதாகிட முகம்பறவை
கசடருக் கிருளாகிட் (7)

ஒளிமுகத் தாற்சுவர்க்க முள்ளமுஷ் லீங்களின்
உயிர்வாங்கு வேனென் றுரைத்து வருகில்மாத்து
இலையுமறுத்து விழவேயதி
லொருவர்பே ரமைந்தெழுத்து
ஒளிவது போலிடது பலகையி லுளவெழுத்
தொளிவழிந் திடக்கண்டு அவ்வுயிர்கொண்டு
வருவேனென்று வுரைத்துப்பின்னவ்
வுயிர்களைத் தானன்று (உத்தார்)

களிப்பதா யில்லீன்சிஜ்ஜின் மீது அதைக்
கருதிவைப் பேனென்ற வப்போது
ஒளிநபி யவிடம்விட் டோர்புறம் பார்த்திடவங்
கோர்பள்ளி முத்தினலே யமைந்ததாலே
தூண்களின்டாலே மரகதமாம்
வாங்குமு ழக்கமேலே (8)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வாங்குநற் றெ(ழ)ழுகைமெள ஹூதுட ஞங்கு
வானவ ரிருந்(த)ிடப் பள்ளி
பாங்கிலோர் நதியு மோடிடக் ககனேர்
பண்புடன் வெள்ளிநா டனிலே
தீங்கிலா மூழ்கிஜிம் மாத்தொழ வாகு
மெனஜிபு றாஹிலுறைத் திடவுட்
டேங்கியே யொருவ ரோர்ஜவா னேடுத்
திகழ்பவ ராரெனக் கேட்டார்.

இதுவுமது

மன்னவர் கேட்க ஜிபுறாஹில் பைத்துல்
மகுமூருப் பள்ளியா மிதினுள்
ஈன்னய மாயிருப் பவரிது ரீசு
நபியுமூ சாநபி யெனவே
அன்னவர் கூற நபிசலா முரைக்க
வவர்களும் பிரத்திசொல் லியன்மை
துன்னிட விருத்திப் போற்றியே புகழ்ந்து
தொழுவியு மெனத்தொழு தனரோ.

முச்சுடராய்விளங்கு தேசியே என்ற

வருணமெட்டு.

—

இராகம்—செஞ்சுருட்டி—ஏகதாளம்.

தோத்திரஞ்செய் தவிடம்விட் டேகிட வைந்தாஞ்
சுந்திரவா னத்தையுங்கண் டாகிட அங்குத்
தோன்றிடப் பெருமலைபோல் மீண்டோர்மலக் கானதுவுந்
துன்னவே யவர் முன்னமே

பாதியுட லுநெருப் பானதில் மற்றை
பாதியுட லும்புல லானதில் உற
பண்புடன் றஸ்பீகோதி யன்புடன் றுவாகேட்டவர்
பக்தியே பெறுஞ்சித்தியே (2)

ஹா நநபி யென்றுவானோர் கூறிட நபி
கண்டுசலாஞ் சொல்லபதி லோதிட அன்று
ஹக்கன்றெழு கைதனையு மக்கணந்தொ ழுவித்தங்கு
வண்ண லும் மகிடமன்னரும் (3)

தீயிலுநீர் மீதினுமுன் றேகமே நிற்குஞ்
சேதியென்ன வென்றார்நபி யூகமே வல்ல
சிற்பரனின் னும்மத்தோர்க்கு வப்புந்தீகுளிரிலது
செய்யவே சொன்னனுய்யவே (4)

அன்றதைக்கேட் டப்புறத்தி லேகவே யங்கு
வாறும்வானத் தையுங்கண்டார் போகவே அழ
கங்கத்திற்குப்பாயம்பச்சை சிங்காசனத்தில் லொருவ
ராகிட வானோர்கூடிட (5)

நாடியதின் மீதிருக்க வானவர் பதி
னாயிரமொ ளிபெருகத் தானவர் அங்கு
நண்ணிடசி றகுதித்து விண்ணோர்கள்ச லாமுரைத்து
நாடவே கூட்டங் கூடவே (6)

கண்டுவப்பு றம்நடந்து சென்றிட நபி
யன்றுவேழாம் வானமதை யண்டிட அன்று
காட்டிடவந் தவாசலிற் பூட்டிட்டிருவரியுறக்
கண்டிடவெழுத் தண்டிட (7)

லாயிலாஹா யில்லல்லாமு கம்ம துற்ர
சூலுல்லாவென் றேவமைந்ததம்ம அங்கு
நாட்டமாய தையோதிட பூட்டதுந் திறந்திடவுள்
ளாகியே பார்க்க தியாகியே (8)

வானம்வாரி நீரியத்தாற் படைத்து மிகும்
வானவர்ஷ ஜிதாவதை யடுத்து நிற்க
வருபவர ரவைக்கண்டு பொறுபொறுநீங் களாரென்று
வாயிலோர் கேட்டிட வானோர் (9)

காரணநபி வருநற் சீர்த்தியே அன்று
கூறிடகூர் லீன்களுமா த்தியே சுற்றி
கண்டுமாராயம்புரிந்து நின்றுநபி நாயகத்தைக்
கன்னிமார் துதி பண்ணினார் (10)

அன்றவ்வித மானபின்வா னோருடன் நபி
யப்புறஞ்செ லவொட்டக மேதிடன் ஆக
வன்றுவொவ்வொன் றுமிரண்ட தாகபெட்ட கமுதுகி
லாகவே யேற்றிப் போகவே (11

வலபுற மாயுதித் திடபுறம் செல்லும்
வகையென்ன வெனஜிபுறாஹிலும் எந்தன்
வயதுள்ள மட்டுமதி சயமிதை யறிந்திலேன்
வள்ளலே யெனச் சோல்லவே (12

அன்றிறைமு கம்மதேயென் றோர்குர விட்டு
கண்டறிந் திடச்சொன்னவன் றழியில் அன்று
வச்சனஞ்சி புறாஹிலும் பச்சமாயோ ரொட்டகத்தைய்
பற்றினார் தொட்டி றக்கினார் (13)

இறங்கும்பெட் டகமது பூட்டியே இருந்
திடக்கலிமா வதுவும் நாட்டியே இருந்
தின்புறவோ திடப்பெட்டி யுந்திறந்திடவேகோழி
இட்டிடும் முட்டை முற்றிலும் (14)

முட்டைமேற்க லிமாவிருந் தோதிட திறந்
திட்டதிற்கசகசாவுள் ளாகிட மேலே
முத்திரைக்க லிமாயிருந் தத்தினமோ தத்திறக்க
மூடியெநபி ஏகியே (15)

சிறகெலாம் விரித்துஜிபு ராஹிலும் பறந்
திறமெலா மயர்ந்துவுதிர் ந்திடவும் அன்று
சென்றெழு பதினுயிரங் கொண்டவான் டடிப்பாடாக
சென்றுயான் முடிவு கண்டிலேன் (16)

கண்டேன்முகம் மதேநின்க லிமாவை சொல்லிக்
கொண்டனேகர் புகழ்ந்துகொண் டாடவே என்று
ஹக்கன்ஜிபு ராஹில்கூற வக்கணமங் குள்ளபாது
சாய்புடன் வெகு பேருடன் (17)

பேருடன்வந் துமுகம்ம தண்ணலார் பதஞ்
சீருடன்ப ணியவொளி மின்னலார் ஹக்கன்
பெருமையைப் புகழ்ந்துதுவா வருமையுடனிருந்தனுப்
பினரோ களிப் பினரோ (18)

அனுப்பிய தைவிட்டகன் றேவெளி தனி
லன்புடன்வா னேருநபி யுந்தெளி வாக
வற்புதமெ லாங்கண்டுமுன் னெப்படியி ருந்ததுவோ
வவ்விதம் அமைத் தேநிதம் (19)

ஒட்டகத்தி லேற்றியனுப் பியபின் இடம்
விட்டகன்றே கவேசில தூரமுன் அங்கு
வோங்கியசு வர்க்கமது பூங்காவன மோடுதயச்
சந்திரன் என வேவரண் (20)

வாசன்முன்வ யிரம்பளிங் கானதாம் நிலை
பேசும்பொன்மா ணிக்கமழுத் தினதாம் அதில்
வல்லபமு ளகலிமா நல்லமுகப் பிலெழுதி
வைத்திட நபி நத்திட (21)

அங்கமைத்தக் கலிமாவை யோதியே நபி
மங்களமாய்த் திறந்துவுள் ளேகியே நோக்க
வாங்குமாணிக் கமாளிகை பாங்குளத திலொருவ
ரந்திரர் புகழ் சந்திரர் (22)

செழிப்போடி ருப்பவரு மானொனில் வானோர்
களிப்போடு ளாப்பார்சுவர்க் கத்தினில் காவல்
திட்டமாய்செ ப பவர்நாயன் கட்டளைப்ப டியேயென
செப்பிட மன மொப்பிட (23)

தேனுறும்பா லாறுமது வாறுடன் தித்திப்
பானநீரா றுனதது நாலுடன் கண்டு
செல்லசுற்ற ளவாயிர முள்ளகாத வழியொரு
சிங்கார வீடலங்கார (24)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

விண்ணெழுங் கடந்து நபிகளின் பெருமான்
விண்ணவ ருடன்றிரு வமைந்து
நண்ணிட சுவர்க்கப் பதியினைச் சேர்ந்து
நவமணி யிலங்குமா மாடம்
எண்ணிட முடியா திருந்திட நான்கு
புறமெலாங் கதிரொரித் ததுபோல்
பண்ணிய றகுமான் றனைப்புகழ்ந் தேத்தி
பார்த்தகங் களித்தனர்ப் பதியே

## நொண்டிச் சிந்து.

---

இராகமோகனம்—ஆதிதாளம்.

சந்திரவ தனத்துடைய நாயகமுந்
தாவரன்ஜி புறாஹிலு மேன்மையுடனே
வந்திடுஞ்சு வர்க்கமதிலே அழகமைந்த
மாளிகையைக் கண்டதின்பின் றுங்குசெலவே

மூந்நூறுலெட் சமாமாளிகை சிறப்புற்றநன்
முத்தினுற்கட் டியேபவ ளத்திலனேகம்
மினனும்வயி ரத்திலனேகம் பளிங்கியினுண்
மெத்தவும மைத்துமாணிக் கத்தினிலமாய்

நிலைவயி டூரியமதாய் அமைந்தவங்கு
நேரிணிலோர் பீடஞ்செம்பொன் னுலாகியதில்
தலமையா கியமலக்காம் சுவர்க்கத்திற்குத்
தன்மையோரிலு வானென்னு நாமமுடையோர்

வீற்றிருக்க வங்கு சுற்றிலும் வயிரத்தாலும்
வீடுகள்ப ளிங்கியாலுங் கோடி கோடியாய்
நாற்றிசைத னிலுமிருக்க வதுவுள்ளே
நாகரீக மாகச்சில பேர்க ளிருக்க

ஓங்கிய மரங்கள் சுற்றிலும் அதினிலே
வுயர்ந்தபட் டாகுமியம் பிடத்தகுமா
ஆங்கிவரின் னொன்றுரைக்க ஜிபுறாஹிலும்
அன்றுநபி கண்டுசலாம் விண்டிடலானார்

மலக்கவ பதிலோதி நபியைக்கண்டு
மன்றுடிக்கொண் டாடிசல பாத்துமோதிட
இலங்குமிம் மாளிகையெலாம் எவர்க்கென
ஏந்தலேவுன் னும்மத்தோர்க்கு வாய்ந்ததெனவும்

ஓதியக விமா வின்படி நடந்தவற்கு
முள்ளொருமை யாயிறையை புகழ்ந்தவற்கும்
கோதிலாப ருளுமைந்தும் முப்பதுநோன்புங்
கொண்டுவெழி யோர்க்குஜக்காத் தளித்தவற்கும்

ஹஜ்ஜுசெய்த வடியார்க்கும் இம்மாளிகைக
ளாகுமென வேரிலுவான் வானவரன்று
பச்சமுட நபிக்குரைத்து மலக்கவர்
பயஹாம்பர் தமைபல வாகத் துதித்து

போற்றிட சுவர்க்க மிலங்க நபுபத்து
பொங்கிட மங்களமாக வெங்குமுழங்க
நற்றிசை த[illegible]ிலுமுழக்கம் தீன்தீனெனு
நல்வசன மா[illegible]பநிறைந்த வுல்லாசமதாய்

சிதரத்துல் முந்த காவென்னும் மரநபிச்
சீர்வரவைக் கண்டுகிளி யானவையெலாம்
குதரத்தாய் பழஞ்சொரிந்து விழுமிடங்கட்
குளிர்ந்திட வுங்கூருலீன் மார்கள் நிறைந்து

ஆலாத்திமா ணிக்கத்தீபத் தாலுஞ்சொர்க்கத்
தாடைக ளணிந்தேயெடுத் தாகியபின்பு
மேலாகத்த ணல்களெழும்பும் நரகமதை
மேலொருநபிபெருமா னேக்கவதுவும்

தீக்கொழுந்து வளைவதவு மலையதுபோற்
றிரளாய்சற் பமுங்கருங் குளவிகளும்
தாக்கிடச் சூட்டினார்க தரி யழவொருவன்
சதையைக்கு ரடதி னற்பிடுங்கிடவும்

ஓதுங்கியு டலும்விழிகள் பிதுங்கிடக்கண்
டோதுமிவ னொனவா னேரோநபியும்
இடுமொழி யெனவுரைக்க விவன்மனையா
விருக்கஜ னஹறுஞ்செய் மூதேவியென்றார்

நடுவிலோர் பீடமிருக்க மாலிக்கென்னும்
நரகமு தலாளியாங் கதிலிருக்க
கொடுங்கன லதால்நூறு வாயிரம்வீட்டிற்
கொடியசற்ப முந்தேளு மாகநரக

முதுகின்மே லொருகோண பாலமது
முன்னிருக்கச் சக்கியென்னுங் கள்ளிமுள்ளதால்
பதுக்கித்தூக் கிடவொருவன் றனை சுக்குமா
பருத்தத டிகொண்டடித் திடித்தனவில்

வெதுப்புமவ் வித மதனை மலக் குறைப்பார்
விற்பனைக் கொள் வனையிற் பொய் யானையிட்டவன்
இதுவித மடைவோனென்றார் வேறொரு வனை
யியற்றித்த லைகீழாயுங் கட்டியரவம்

கடித்திட கிஞ்சிர்முகம்போல் இருப்பவன்
கருத்துட்கு பிறையெண்ணிக் காணமூமினாய்
நடித்தவ னெனவுரைத்து மலக்குநபி
நாயகத் திடமுரைக்கும் போதொருவன்

தனைப்பிடித்திருக் கியேபின் கட்டுடனே
தணலில்வாய் மூக்கும்வெந்து தகித்தவவன்
மனதில்வஞ் சனைகள்வைத்து சன்னைகள்பேசு
மடையனி வனுகுமென் றோதியபின்பு

மாதொருத்தி தலைகுலைய சற்பங்களு
மயிர்க்கொன்றாய் நின்றுகடித் திடத்தேளும்
கோதுளவட் கதரிடவே கொட்டுமிவள்தன்
கூந்தலைத் திறந்துசிசுக் கமுதளித்தாள்

என்று ரைக்க வஞ்சியொருத்தி நெருப்பினுடை
யிட்டுநஞ் சுமிழ்ந்து மேனியெல்லா மூற்றமாய்
இன்றுநர கத்தில்வேகு மிவட்டாம்புல
மிட்டுவாயா டையாபர ணங்களுடனே

கொஞ்சித்திரு வீதிதனிலே பலர்முன்பினிற்
கொண்டாட்டமிட்டு நடந்த சண்டாளியென்று
அஞ்சியுரைத் திடமலக்கு நபியின் முன்னு
லப்பொழுது விற்பன்னரு மொப்பியிருக்க

அக்கினியாம் பாகநூறு கிணரதினி
லன்றொருவ னைப்பெட்டக மீதுவமைத்து
துக்கமுடை யோனேயிறக்க சற்பமுந்தேளுஞ்
சுத்திக்கடித் திடுமிவன் யாரென்றார் நபி

வட்டிவாங்கி வயிற்வளர்த்த வண்டனென்றோத
வஞ்சகனொருவன்றேகம் நஞ்சுகிடக்க
சுட்டனல்மூ யுங்கொதிக்க இவனேழையைத்
துரத்தி முக கருத்த தோசியென்றார்

இப்படியனேகவிதமாய் நரகமதி
லேகநபி கண்டுமன நோகுதலாகி
செப்பமுடன் ஜிபுராஹிலும் இருவருமாய்ச்
செல்லவெளி யாகும்பொழு தல்லலுறவே (சந்திர)

## வெண்பா.

அழலெரியுஞ் சூட்டி லனேகரெல் லாம்வருந்தித்
தழலதனி னின்றெரியத் தான்கண்டு—கழன்மறையின்
றுரிணையு மாலநபித் தாழ்விழி நீர்சொரியக்
கூர்மையுடன் றெரிந்தார் குறித்து

வேறு யானபியே என்ற

## வருணமெட்டு.

இராகம்-கவாய்—ஆதிதாளம்.

ஆதிமு கம்மதிறை யிடமஞ்சி துவாவிருந்து
நீதியுட னதாபைவிட்டு—நீக்கு மெனப்புகழ்ந்தார்

அப்போதி றையுரைப்பா னிவ ரடங்க லுநீக்கிவிட்டால்
செப்புமுன் னுமத்தெல்லாந் தீந ரகில்வைப்பே னென்றான்

அன்றுநபியுமிறை யிட மாகா தவ்விதஞ்செய்ய
என்று விழிகலங்க விறை யன்று வருளிடுவான்

கண்ணீ ரடிவிழுந்தால் நற் காசீ முகம்மதுவே
யெண்ண ரிதாங்கொடிய நர கேகுமுன் னும்மத்தெலாம்

உரைகேட் டகுமதுவுங்கண்ணீ ருள்ளி ழுத்துக் காண்டவரும்
இறையே யருவுருவு மிலா தெங்கு நிறைப்பொருளே

ஒடுக்க முதிப்பிலானே சர்வ வுலகம் படைத்தவனே
யடுத்த வென் னும்மத்திற்கு வருளிட் டழைப்பாய் சொர்க்கம்

துதித்திவ் விதநரகை விட்டு தூய நபியுஞ் செலவே
யெதிர்த்தோ ரிருளறிய வதி னியல்பு விண்ணு மண்ணழியும்

இதுபோ லெழுபத்தாயிரந் திரை யெல்லாங் கடந்தபின்பு
அதுபோல் வெண்மேகமதாய திரை யடர வெழுபத்தாயிரம்

திரையுங் கடந்தபின்புப் பனித் திரையு மெழுபத்தாயிரம்
விரைவாய் செலும்போதிடியின் றிரைமேலே நூறுயிரமும்

செல்ல வெழு பத்தாயிரந் திரைதேஜ ஷிடுமண்ணதனுல்
உள்ள தகன்றிடவே வானே ருயர மறைந்திடவே

அன்று ்னந்திகைக்க நபியங்கு ஜிபுரைஹிலும்
என்று மிதற்கப்புறநான் வர வில்லை யிரைகட்டளையே

வந்தாலி றையொளிவால் நான் வெந்து தணலாயுருகி
விந்தை யுளபுனலாய்போவே னென்று ரதுததியில்

முத்துச் சிவிகையுட னிரைமூன்றே டொருமலக்கை
யத்தி னமேயனுப்ப வதிலன்று ஜிபுரைஹிலும்

நன்றொளி வுக்கடலில் வானோர்நபியை குளிப்பாட்டியே
அன்று சிறகதினல்நபி யங்க மெலாமுலர்த்தி

தண்டிகை மீதுவைத்துநபி தம்மை யனுப்பிவிட
கொண்டா யிரங்காதவழி வானே ரன்றெ டுத்துவாங்குசெல

செல்ல வொருவொளிவைக் காணத் தீனி னிறசூல்நபியும்
சொல்லாயிரங்காதவழிமார்புந் தோழுமுடையோனைகண்டார்

கண்டு நபிசெல்லவே யன்றுக் கடலி லொருமலக்கு
மொண்டுத்தன்கையதினல் நீரைமுகிலி னிடையள்ளிவிட்டார்

கண்டு நபியாரெனக் கேட்க விண்டார் மீக்காயிலென்று
அன்று சலாமுரைக்க பதிலாக வுரைத்து விண்ணோர்

போற்றிப் புகழ்ந்தபின்பு விண்ணோ ரேற்றிப் பல்லக்கெடுத்து
நாற்றி சையு மானநபி தன்னை நாய னிடங் கொண்டு சென்றார்

செல்ல வனேகமதாய் மலக் கெல்லாந் தஸ் பீகுடனே
நல்ல சலவாத்துட னின்னும் வல்ல சஜிதாவிலும்

இருப்பு மறிந்துநபி யப்பா லேக வொருமலக்கு
தரிப்புந் தகத்தருவிற் பாதந் தான்சி ரச றுசைமுட்ட

பதினல்வ ருடத் தடிப்பாடு பார மலக்குடனே
அதிப தியாயிருந்துக் குளலாகி யசூரொடுத்து

எடுத்துக் கரம்பிடித்து மூச் செல்லாஞ் சுருக்கியவர்
தடித்த குரல்கழுத்தும் விம்மித் தங்கிருக்க காணநபி

கண்டுவின் னூரெனவே யறிந் தன்று சலாமுரைக்க
நன்று விசுராபீலுஞ் சலாம் விண்டு புகழ்ந்தேத்தினர்

## விருத்தம்.

---

நாயக மவிடம் விட்டு நடக்கும்போ தறுசைக்கண்டு
நேயமாய்த் தெரிசித் தங்கு நிற்கும்போ திறை பொருட்டால்
தூயனன் றெளிவு காட்டி தொனித்துநல் லருசி லேறு
வாயக மகிழ வென்று வல்லவ னுரைத்த காலம்

## கந்தூரி காட்சி என்ற வருணமெட்டு,

இராகம்—செஞ்சுருட்டி—ஆதிதாளம்.

ஹக்கனபி யறுசிலேறிடவே பாத
கபு சகற்றிடமன ஞடிடவே
அக்கணமேயிறைவன் ஹபுசுடனே வர
அருளியபோது நபியாருடனே

அரசேவரமனம் பொருதாதெனநபி யுறைகூறியேநபிமூசாவும்
அணுகத்துரிசின மலேயிற் கபுசதை விலகியேறவி ராஜாவும்
ஆனதென்றுரையோதினரிறை வாகுடனருள்சேதியாதெனில்

ஹக்கனபி

ஹபுசுட னறுசதி லேறுமென்றும் நடுக்
கங்கொண்ட வறுசதை மாறுமென்றும்
நபுசிலாதிறைவனவ் விதஞ்சொலவே நபி
நாயக மறுசதி லேறிடவே

நலமாயொருவறு பதினயிரத்துட னிலங்குமூந்நா றதுதானே
நவிலோர்தூணுக் கோர்தூணே நூற் நல்லவருடத் துலேதானே
நாமமானதிற்சேவற்போன்மலக் கானதொன்றதிற் கூவிடவது

ஹக்கனபி

கூவிடக்கண்டுநபி யேகமலக்கதுவுங்
கூர்ந்துவின் னுமனேக மலக்குகளும்
மேவிந பியைப்புகழ்ந் தேத்திடவே திரை
மேலெழு பத்தாயிரஞ் சூழ்ந்திடவே

மிருந்தமாதிரை யதனேநீங்கிட இதமாய்மரகதத் திரைகடந்து
மிக வினுந்திரு ஒருவாயிரந்திரை விலகுபசூதி தித்திரையும்
விலகிடப்பனிஇருள்தாற்றிரை எழுபதானவாயிரமூநீங்கிட

ஹக்கனபி

திரையுமெ ழுபதின யிரமணத்தால் வீச
செல்வந பியதையுந் தாண்டியப்பால்
இறையோர்சப் தமவித்து வென்னபியே நீரும்
என்னருகினில்வாவென் றியம்பிடவே

யினிதாய்ஒருதினாதனைநீக்கிட்நபி ஒருகாலடியும்வைத்திடவே
யிதுநூருயிரமெனுங்காதவழி யினையோனருளாலதுசெலவே
யித்தகையட வைத்த தாயிர முற்ற வாண்டடி பெற்ற தாகிட

ஹக்கனபி

கடுகிவா வெனுமிறைக் காசீன பிக்கொளிவைக்
காட்டினுன் றன்சொரூப ஜோதியதை
அடுத்துநபிபார்க்கும்போ தன்றுவி ழிபுகைந்து
ஆலநபிவிழவு மிறை யறிந்து

அப்போதிறையு முப்பாழ்முகம்ம திப்போதுபயம் மாகாதன்
றனையத்திடமு முறவேஒளிவின்நிறைவைக்கண்டிடநன்னபியும்
அன்புடன்மனதின்பமாகிபே ரின்பமானதை முன்புகண்டிட

ஹக்கனபி

நலமாய்லா கூத்துமலக் கூத்ததை யுமொதுக்கி
நான்காய்ப்பி ரித்துநபி தானோக்கி
வலுமையு ளறப்ப னிலங்குமு ருகாணுமல்
வணங்கிப்பு கழ்ந்தாராமீ னெனவிறைபால்

மறையன்ஜபரூத் ததையும்பிரித்து வினாவாய்ப்பாருமெனகூற
மதினத் ததிப ரிதமாய்க்காண ஒளிவுற்றிடலா கூத்துமிர
வங்க னநபி மங்களமுடன் துங்கவொளிவுமி லங்க நோக்கிட

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அன்றுநன் னபியு மாதிதன் னொளிவை
யறிந்தபின் றினநடு வமைந்து
கொண்டபின் னேசை வலம்புரிச் சங்கின்
கோஷ்டமோ டோரொளி காட்ட
கண்டனர்க் கமல மலர்நடு பினையுங்
கலந்தநற் றினயது னீக்கி
மண்டலம் படைத்த வகதுடன் பேச
மஹமூது புகழ்ந்துநின் றேத்தி

இதுவுமது

பூட்டிடுங் கலிமாத் திரைநடு வறிந்து
பூரித்து வகமகிழ்ந் தொளிவைக்
காட்டிய பொருளே ஹககனே யெனவூர்
களிப்புற்று விறைதனைப் புகழ
கேட்டறிந் திறையோ னதுபொழு தெனோகீங்
கிட்டிடப் பார்த்ததுண் டோசொல்
தாட்டிக நபியே வோதெனக் கேட்கத்
தான்கண்டே னெனநபி யுரைத்து

## பாட்டு முன் வருணமெட்டு.

நேரிலிருந்துநான்கு வாயிர மாம்வசனம்
நேசமு டன்நபியு மிறைய வனும்
சீரிலங் கிடப்பேசி யாகிம றைவதாகச்
சிறந்திரு பதினைலா யிரமதாக
தெளிவாய்வசன ஒளிவின்னளவிற் செழியமொழியுந்தான்பேசி
செப்பும்வசன மொப்பச்சிலரிடஞ் செப்புமியல்பில்லை எனக்கூறி
சிற்பான்சொல வப்படிநபி யொப்பிடவினுஞ் செப்புவானிறை

ஹக்கனபி

ஆலநபியையெனக் கானகா ணிக்கையென்ன
அகத்திற்கொண் டுவந்தீரொன் றேயிறைவன்
சீலமு டன்கேட்டிடச் செப்பியத் தஹயாத்தைச்
சீர்கொண்டு வந்தேனென்று ரதுதினத்தே
திகழ வாதி மகிழ சலவாத் ததுவுந் தந்தே னெனமொழிந்து
சீரா யிதுந்தக் பீரு மெய்யென யாருங் கலிமாக் கூறிந்து
செப்புமுமீனுற்பனற்கறி விப்புவென்சலாம்செப்பினே னென

ஹக்கனபி

உலகமைத் தோனுஞ்சலா மோதிட் மலக்கெலாம்
உகந்துஷ காதத்தோதி மகிழவெல்லாம்
சிலதின்னு மிறைநபிக் கிலங்கிடச் சொல்லுவான்
சிறந்தவுன் னும்மத்தோர்க்கு வெனவிறைவன்

சிந்தையிற்புகழும் தந்திடுமன்னமவந்தச ஊத்திற்குப்பதிதும்
சிறப்புடனிரவு விழித்தலு னபிலட் சத்திருபதினு யிரமெனவும்
சீருறுமூன் நூறதுபத்து மூன்றுடன்முருசலானவனொன்றும்

ஹக்கனபி

என்றும லக்குகளு முண்டென வுமிறைமுன்
னேவற்ப ணிவிடைகள் செய்யுமெனும்
கொண்டுவுன் னும்மத்தோர்யான் விண்டதுபோல்நடக்க
கொடுத்தேன் வெகுமானமென் றிறையுரைக்க

கோமு கம்மது ஹாமீமதுததி யாமீனெனமொழிந் தார்பலக்க
குறிப்பா யாதி யுரைப்பானேங்கி யுரைக்கா தீரென் றேசிறக்க
கோவெனுனபி யாதுகாரண மோதுவாயிறை யேதிங்குபயம்

ஹக்கனபி

சொல்லுமெ னக்கேட்டிட வல்லவி றையவனுந்
தூங்குரா ரறுசின்கீழ் முஹையதீனும்
அல்லலு றமெழுந்தால் அகில புவனமெலாம்
அறுசும்க டுங்கிவிடு மவர்சினந்தால்

ஆதியிதுவிதமோதும்போதினிலேதுமெனையனில்ஓர்முதலும்
ஆக்கவிலையென வோர்க்கமொழிந்திங் காக்கு வீதமேதெனவும்
ஆதியிடம்தை யோதிடவிறை யோது வானபிசாது வேயென

ஹக்கனபி

உந்தன்தீ னின்கிளையி லுகந்துபி றப்பாரொன்றும்
உரைத்துந்தன் மனக்கோணல் விடுப்பாயென்றும்
இந்தவி தமுரைக்க ச்சிந்தைபூ ரித்தறுசில்
இருக்குமோர் வாளதனைப் பார்த்திறசூல்

இறையே என்தீனவர்கட்கோது முறையுற் றவர்களே துணிக்க
இதுவோவெனப்பயந் திடவுமாதி யிலைவேறுகு மெனச்சிறக்க
எழுங்குபிறுவஞ் சகமகந்தை யெழுமதுகளை யறு மிதுவென

ஹக்கனபி

## வெண்பா.

அன்பாய் முகம்மதனா யாதரித்தே யேகனினு
மின்பமுட னென்னையுனீர் கண்டீரோ முன்பாக
உன்னொளிவை கண்டே னுவமையொன் றுங்காணும
லென்னகத்தி லேயுகந்தே னிசைந்து.

## பாட்டு முன் வருணமெட்டு.

இறைவன்ம றுபடியு மின்னும்வேண் டியதைச்சொல
லென்றுன பியப்போது கூறிடுவார்
விளாவாயென் னும்மத்தோர்க்கு வளாந்தபட்டோலையெல்லாம்
வேண்டியெ னேகியாம நாளதெல்லாம்

வினவ யென்வசந் தருவா யெனநபி புகழ வாதி யுளாசீலம்
விதமேயடியவனொனவு மிறையெ னும்விதமு மறியுமடையாளம்
விளங்கிடவது திடங்கொள் தீனவ ரடங்கலுமுத லிலங்கயாவும்

ஹக்கனபி

கேள்விகேட் டுசுவர்க்க வாயல னுப்பியபின்
கேட்பேன்மற் றெல்லோரையுங் கேள்வியென்றுன்
தாழ்ந்துந பியும்மத்தைச் சூழ்ந்தபிழை பொருத்து
சந்தான மருளென்றேத் தான்துதித்து

சாதனமாகமுன் னுளோர்செய் பாவமதற்கிடும்சோதனையே
தரணியிலதுதகி விதவிதரூபம் சமைத்திடுவேச மதுதனையே
சம்பத்துளவென தும்மத்திற்கு செம்மலிலதுவிம்மையிலருள்

ஹக்கனபி

அப்போதி றைநபிசொல் லொப்பிப்பு கழ்ந்திருக்க
அங்கோ ரொடுக்கிறங்கி யருகில்நிற்க
செப்பமாய் நபியுண்ண செப்பிட வேயிறைவன்
தின்னேன் றனித்து வென்றுரிறையருளின்

திருவாயொருகைவ்ரவொடுக்கதைப்பருகவதுவோடுன்னபியத்
தினமேயதுகைதனிலேமோதிரம்பொருதநோக்கிபின்விழியுற்
றில்லிடங்கன லுள்ளவன்னமு மள்ளியேகரமுள்ளில்வைத்திட

ஹக்கனபி

மறைந்ததங் கனநபி வல்லோன்தனைப்புகழ்ந்து
மாற்க டனிருக்கும் வேளையிலே
இறைவனைப் போதுசப்த்த மிட்டுமுன்னும்மத்தோர்க்கு
இதமா யைம்பத்தொஹத்துத் தொழுகைகளும்

இன்னுமறுமா தன்னேனென்பதுவும் இடுஜக் காத்து நாலீலொன்
றிதமோராண்டுஞ்சதமாய்ஹஜ்ஜுவிதமுன்னும்மத் துக்காகும்
என்றிடவிறை நன்றெனுநபிக் கொண்டிடமன மன்றுவந்தனர்

ஹக்கனபி

வந்துந பிமூசாவுக் கிந்தவி தங்கள்சொல்ல
வாய்க்காதென் றனுப்பினு ரிறைமுன்செல்ல
வந்தவி தஞ்சென்றிறை யவனைமன் றுடிக்கேட்க
வைம்பதொ ஹத்திற்பத்தை யகற்றிநிற்க

வாலநபியுமூ சாவுக்குரைக்க வாகாதென மறுபடியுரைக்க
வன்றே யிறையிடஞ் சென்றுநன்னபி மன்றுடயிருபதுமகற்ற
வன்றுநன்னபிநன்றெனவது வன்றுமூசாவினண்டையிற்சொல

ஹக்கனபி

வந்துவ சனமதைச் சொன்னதி னமதில்
மாநபிக் குறைத்திடும் வாறெதனில்
முந்தின துபோலவு கந்துரைத் துவின்னமும்
மொழிந்தவொ ஹத்தைக்குறைத் துவரவும்

மொழியயினிநபி செலலாகாதென ஒளிவையுடையர் மனநாண
முன்னேனுமறிந் தண்ணனபியிடந் துன்னஒருகுரலதுபுண
முழக்கியேமனக் கலக்கமேனபி துலக்கமாயிருவிலக்கினேனறி

ஹக்கனபி

ஐங்தொஹத் துத்தொழுகை ஹஜ்ஜு—ஙகன் வயதிலொன்
ருகஜக் காததுநாற்ப ததிலோர்பங்கும்
சிந்தையு டன்றழுலான் றிங்கள்தனிலே ஙொன்பும்
செய்யச்சொல் லென விறை யுரைத்தபின் பும்

தெளிவாயிறையை நபியும்புகழ்ந்து திரும்பிவரநற் றிரைகடந்து
திகழ ஒருவிண் ணகலஜிபுரைஹில் வருகவிருவருமேதுடர்ந்து
திரும்பிடநபி எரும்பதிபதிவிரும்பியேசலாம்புகன் றுஉத்துசா

ஹக்கனபி

கண்டபின் புபைத்துல்மு கத்தீஷு—ப் பள்ளியதைக்
கண்டுபு ராக்கிலேறி வரும்பொழுதே
கொண்டுவ ருகபுராக் கன்றுவோ ரடிவைக்க
கூறுநா நூறுகாத வழிதுலேக்க

குதிரையதுமக்கப் பதியைநாடிட் கஃபாவதில்நபி வந்திறங்க
கூர்ந்துவனேவரும் சார்ந்துவிடியுமுன் வாங்கு டன்புகழுமிலங்க
கோமானன்னபி பூமானன் றுவி மாமாய்நின்றிட வாமீன்கூறிட

ஹக்கனபி

தொழுதபின் னலங்குள முழுவசு காபுகட்கும்
சொன்னார்தாஞ் சென்றுவந்த விதமெவர்க்கும்
பழுதாயாங்கொருசூதன் முழுதும்பொய் யென்றெண்ணி
பதியடைந் திடச்செல்ல வோர்மீனேயும்

பாரியிடமதை வாறியீய்ந்துபின் வாரிதனிற்றலே மூழ்கிடவே
பற்றிசுதனே மற்றைகுடமுமே டுத்துக்கரையில் வைத்திடவே
கடுகியன்னதி முழுகவடிநதி கொடுசென்றேகி விட்வுமேறினன்

ஹக்கனபி

## வெண்பா

ஆண்வடிவமாயிருந்து வழகுகெட்டசூதனவன்
பூணுமங்கை ரூபமதாய்ப் போனன் நாணமுடன்
கானகத்திலேயிருந்துக் கண்கலங்கி நின்றழுது
ஊனகத்தைப் பார்த்திருந்தா னுற்று.

## முன் வருணமெட்டு.

வேட்ன -பு ரியராஜன் காட்டில்வந் திவள்மேலே
விருப்பங்கொண் டெடுத்துச்சென் றன்றவளை
மேட்டுமை யாகத்தாலி பூட்டியேழ் வருடமாய்
விருப்பமாய் வாழ்ந்துவெழு பிள்ளையுமாய்
விளைவா யீன்று ஒருநாட்டினமே நிறைவாய்மூழ்க நதியதுமுன்
விதமாயடிநதி யிதமாய்கொடுவரு னிதமேகுடமுஞ்சிசுவதுவும்
மேலெடுத்தவன் தூலமானதின் கோலமாய்மனை யாளிடம்வர
ஹக்கனபி

ஆய்ந்தமீ னுகைக்கையு மாகவி ருக்கக் கண்டு
ஆச்ச ரியங்கொண்டிறை செயலீதென்று
வாய்ந்தம னையாள் மக்கள் மற்றினத் தாருமன்று
வந்துந பிக்குவர லாறும்விண்டு
வலிமையாயுள கலிமாவோதியே யிலங்குந்தீனில் வந்திடவே
வகையாயார்களு மிகுருஜின்விதங் தகையுமுற்றலி யாருடனே
வன்னமோதிர மின்னவைத்திட முன்னமேநபி யண்ணலுற்றிட
ஹக்கனபி

நாயந்த னைப்புகழ்ந்து நேயமு டனெல்லோரும்
நன்மனை சென்றுவாழ்க இறையருளால்
தூயதா னவிந்நூலைச் சொன்னவர்கருங் கேட்டோர்க்கும்
சூழ்ந்துச பையிலுள்ள யாவர்கட்கும்
துய்யோன்கிருபை செய்துவாழ்க வையம்மீதுநல் லோர்வாழி
சுகுணன்தினகரன் தருபேருளதிரன்சுநதிரஷேக்கிஷ்மால்வாழி
துய்யநற்கவி செய்யவின்புறு மெய்யர்வாழி சையதிமாமுனா.
ஹக்கனபி

இப்புத்தகத்திற்கு
நாயக மறுசோதய விரஞ்சித பதகீர்த்தனமுதமென்னும்
நாமம் புனைந்ததில் இரஞ்சித பதகீர்த்தனமுதம் நிற்க
**நாயகமறுசோதயம் முற்றுப்பெற்றது**

# இரஞ்சித பதகீர்த்தனாமிர்தம்

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அருவினிலுருவா யகதுக ததுவா
யாதினு னிறைந்தசிற் பரமாய்
திருவினுஞ் சிறந்த ஜின்மயந் தனிலே
திருவென வுதித்தநல் லருளாய்
நருமலர் கந்த வாடைகள் கமழ
நபிகளுக் கரசுநா யகமாய்
வருநபி யிறசூ லவர்புகழ் கூற
மறைபுக ழிறைவனே காப்பாம்.

இராகம்—கவாய்—ஆதிதாளம்.

யாநபியே யாநபியே ஏகனிற சூல்நபியே
மாநபியே மாநபியே மஹமூது முஸ்த பாநபியே
யாநபி

வேதப்பொ ருள்வடிவே விண்ணோர் துதியருளே
நீத ரப்துல்லாதவத் துற்ற நித்யா னந்த நன்னபியே
யாநபி

மோகமெ னுங்கட்லில் மூழ்கித் தவித்திடாது
ஏக னருள்நபியே யெனக் கின்பந் தந்தாளுவீரோ
யாநபி

தீனின்க னியமுதே எங்கள் செல்வ முகம்மதுவே
வானின் மதியழைத்த வுயர் வள்ளல் ஹபீபுல்லாவே
யாநபி

சொர்க்கப் பதிக்கரசே சுகுண வுல்லாசமேோ நின்
பொற்க மலவடியைத் தரும் புண்ய முகம்மதுவே
யாநபி

காதம ணங்கமழுங் கஸ்தூ ரிதேகியோ நின்
பாதந் தனையளித்து விந்தப் பார்த னிலேகாருமெனை
யாநபி

தீராவி னையகற்று முங்கள் செங்க மலப்பொற் பதமே
காரா னந்தமுடைய வெங்கட் காசீமுகம்மதுவே
யாநபி

கொடியனி புலீசுட கூத்தி லகப்படாமல்
வடிவான வுன்னருளைத் தந்து வய்ய கத்திற்காருமெனை
யாநபி

கோடித்த வஞ்செய்தா லுங் குருவே யுமதருளை
நாடி யடையாதவர்க் குண்டோ நல்ல சுவர்க்கமது
யாநபி

என்னகு றைசெய்தா லும் இறையோ னபியமுதே நின்
தன்னையடைந்தவர்க்கு த்திரு சற்குருவாய் வந்தருள்வீர்
யாநபி

மானைவி டுவதற்குத் துணையாகி யவ்வேடர் தனை
தீனில் வரவழைத்த வெங்கள் செம்மல் முகம்மதுவே
யாநபி

மேகங்கு டைபிடிக்கும் வேத மெலாந்துதிக்கும்
பாக முடையவரோ கண் பார்வை யெனக்கருள்வீர்
யாநபி

இன்னுந்த யையிலையோ நின் னிருசெ வியுங்கே ட்கலையோ
மன்னர் மன்னர்புகழுந் திரு மக்க முகம்மதுவே
யாநபி

பாராவ ருமமென்ன விந்தப் பாரி லடியேன்முகம்
சீரார் தினம்புகழு மெங்கள் தீனின் குலக்கொழுந்தே
யாநபி

மாணிக்க பேரழகே வடிவா னமுச்சுடரே
ஆண் பொன்னுபரணமிடு மாயி சாநன்னபியே
யாநபி

வய்யம திலடியேன் வாழ்த்தி யுமைத்துதித்த
சய்ய திமாமுக்கொரு திரு சற்கு ருவாய்வந்தருள்வீர்
யாநபி

வேறு திருமால் மருமகனே என்ற

## வருணமெட்டு

இராகம்—கவாய்—ஏகதாளம்.

சல்லல் லாஹு—ஸல்லம் நபித் தாளே தீனேருள்ளம் வெகு
சல்லாபமு டன்றுதித்து வல்லாசம தாய்முடியிற்
சாத்திமலர் தூத்தி புகழ்ந்தேத்தி கொள்வீர் போற்றி
சல்லல்லாஹு—

மாங்க தலிகோங்கி லவுதேங்கு பனையோங்கு மரு
மல்லிகைசொ ரியும்பூங்கா வலலிசெங்க முநீரோடை
வாசம் மக்கா தேசம உல் லாசம் பிரகாசம்
சல்லல்லாஹு—

வண்டி னங்கட்கீத மிட வென்றி சையுநாதம் மிகு
வன்னமயி லுமுலாவ வன்னமோடு கோகிலமும்
வழங்க வேதீன் முழங்கசெல்வம் புழங்கச் செங்கோ லிலங்க
சல்லல்லாஹு—

யார்க ளுட்னுள வசு காபும் புடைசூழ திரு
ஹக்கன்ஜிபு னாஹிலொஹி மிக்கவந்த ருளமுகி
லதுவேகுடையிடவே பெறுங் குருவே யிறைதிருவே
சல்லல்லாஹு—

மனத்தி னிருளகற்றி சத்வ குணத்தி னியல் பியற்றி மரு
மாசிலாசு வர்க்கப்பதம் நேசித்துச பாயத்திட்
வருவா ரருள் புரிவார் வரந் தருவார் நபிகுருவார்
சல்லல்லாஹூ

வேண வரம்பெறுவீர் அருள் காண சுகமுறுவீர் பெரும்
வேதவேதாந் தப்பொருளென் றோதியுணர் வீர்கட்பவம்
விடுமே யதுகெடுமே பக்தி யடுமே வந்துத் தொடுமே
சல்லல்லாஹூ

இன்ஸான் கோலமாகி யதி னியல்ப தைவிட் டேகி யுள்ளோ
ரொக்கெதிய டைவாரொன்றுந் துக்கசாக ரமேயல்லா
திகமும் பரசுகமு மிலை யகமு மிருள் ஜெகமும்
சல்லல்லாஹூ

இலங்கு மயில்வடிவா ரிந்த வுலக முதன்முடிவார் அவ
ரின்பசுகா நந்தந்தனை யன்பனுன் சையதிமாமுக்
கிடுவார் காணத்தொடுவார் அருள் புரிவார் நபிகுருவார்
சல்லல்லாஹூ

## வேறு இராகம்-கவாய்-ஆதிதாளம்

எங்கும்புகழுமயில் ரூபவாசா நின்னின்பமருளுந்திருகுருநேசா
நேசாப் பிரகாசா சர்வேசா வுல்லாசா வா
எங்கும்பு

பொங்குங் கருணையுள்ளப் புவிராஜா நல்ல
போத மளிக்கு மனுக் கிரக வீசா
இங்கங் கெனுதுநிறைந் திடுநீதாத் திரு
வேகாந்த ரானகுரு ஜெகநாதா

ஏதடி யேன்மனவா தனை யும்மிலாபாதமருள்மதினவதிபா திரு
யிகபரந்தனிலுமையன் றிலதுவெவ
ரருளிடுங்கிருபையுளோர் சரகுக்கொரு
பதியெனவமரறிவே யடியேன்பவ
மறுந்திரு குருமுடிவே யனுதினமும்

திக்கெங்கும் புகழ்ப்பிரபல மக்கமா நகர்க்கரசே
ஹக்கன் றூதரானபீரோ சொர்க்கமஹமூதரான
எங்கும்

அல்லும்பகலுனினதடிகாணமனதஞ்சலிக்குதேபந்தமதுணை
வெல்லுமிதமதனை யருள்வீரோஎன் வேந்தரஹமது நற்சீராரே
சொல்லுங் கலிமாநிலை யறியேனே யிறைத்
தூதாங்க் ரும்மையின்னுந் தெரியேனே
யெல்லை யின்னதெனவு மருள்வீரோ யிந்த
வேழைக் கிரக்கமது புரிவீரோ

ஈயுமுடலமு மாயுமுன்னல்வினை மாயவுமேபவம்மாயவுமிப்புவி
யெங்குங் கமகமகம வெனவேவாசம்
பொங்குங் குமுகுமுவென கஸ்தூரிமணங்
தங்குஞ் சடலவொய்யாரா வடிவுடன்வ
யங்கு மப்துல்லா புத்திரா அலிமாதுல

ரொன்னும்புகழ் கொண்டுலகில் மின்னுஞ்சர கிற்புகுந்து
வண்ணலொஹி பெற்றகோமான் மன்னர்மஹமூதரான
எங்கும்பு

பாசபந் தமதின்றுடர்பாலே மனதாசையுறுதிவிப் புவிமேலே
மாச கற்றுனலவிறைதூதேததிவந்தருட்செய்குவீர்மஹமூதே
தாசன்று யாதனைத்தீர்ப்பீரோ சதா
சன்மார்க்கத் திலிறுத்தப்பார்ப்பீரோ
நேச முடனேஜெயந் தருவீரோ நின்
நித்யா னந்தசுகத்தை யருள்வீரோ

நித்தியமுத்தியி ருத்திடநத்திடு வித்தினிமுத்தென சத்ததா
விண்ணவர்புகழுமணியேப் புவிமுசிலீம் [யுற்றிடும்
நன்னவர்க்கு வருங்கனியே மறைபுகழு
மண்ணலர் கதிஜாபதியே ஆயிஜாதிரு
மன்னரு மாகியநபியே அனுதினமென்
சித்தமீதிருந்துப்பவ முத்திடாதனுக்கிரக
மெத்தவும்புரிந்துசுய வத்துவிதமேயருள்வீர்
எங்கும்பு

ஆல மடங்கலுக்கு முதலாகி நின் றண்டசராசரத்தின்வடிவாகி
சீலமுடனதனி லொளிவாகி யதின்சீராயுடலினுக்குள் ளுயிராகி
ஞால மதிஞல்வகைப் பிறப்பாகி அதில்
நன்னெழு வகைதோற்றச் சிறப்பாகி
பாலங் கடந்தப்பெரும் பொருளாகி மனப்
பற்ற திறந்தவிடங் குடியாகி
பருவுடமீதுநற்சுடருறுமணிதிருபகாறு சுவையறுமதிபதி
பக்தரின் மனதினடுவே நடனமிடு [யாகிய
முத்தரே யுமதுவடியே னபயமென
வித்தல மதிலே யடைந்தேன் மலரடியை
யித்தருண மெத்தவளியே யடியேனெனைப்
பெற்றவள்கு ழந்தையைக்கை விட்டிடாவண் ணமதுபோல்
கிட்டிடவ ருள்புரிய யிட்டஞ்செய் சையதிமாமுக்
எங்கும்பு

இந்துஸ்தானி—ஜோபனபித்தா—என்ற
## வருணமெட்டு
பியாக்கு—ரூபகதாளம்

திரு சாலோப ரூபா சாயுட்சிய தீபா சந்தான பூபனே
திருசாலோப
மேலோன ருள்பெரும் வாலமு கம்மதே
ஞாலமீ திலுந்தன் சீலானு கூலஞ்செய்
சாலோப
வேதமுதலுனை தேடிப்புகழ்ந்திடும் நாதரெனும் வருமாதவரோ
வேண்டினே னும்மை யாண்டருள் நன்மைச்
சான்றோர் துதிபெறு மாண்டவரோதிரு
சாலோப
நாறுஞ்சடலம் வேருகாமலுமருண்மாருய மேயருள்சீராகவே
நன் குடை நீதா வென்குரு நாதா
பொன்மலர் பாதார விந்தமருள்திரு
சாலோப

மும்மலத்தினக மிம்மையிலாகாது நன்மையருளுமுகம்மதுவே
முத்துயிலேற சித்திபெற்றோருங்கும்
வித்தையருள்வாய் கத்தனபிதிரு
சாலோப

எல்லையிலாதெனதுள்ளமுருகினேன் வள்ளலகுமதுவல்லவரோ
எய்யுங்க ருணையிவ் வய்யக மீதிலே
சையதி மாமிட மய்யமிலாத்திரு
சாலோப

நாலேநார்கே—சாவரியான்தில என்ற
வருணமெட்டு.
இராகம்—தேசிகம்—ஆதிதாளம்
ஜெக ரூபா பூபாச் சீரருளும்பவ வில்லதுவிலாதுன்
சீதபாதாரம் தந்தாளச் செய்யுமாதாரம்
ஜெக ரூபா
ககனமாதி சகலலோகக் கதிபாநீ பிரக்கியாதிபா
கவியனைத்து முனிநினைத்துத் தினந் துதிக்குந் தியாகரா
ஜெகரூபா
அறுசிலேறி யிறைமுன்பேசும் அறிவானந்த போதகா
அக முருகி யுமைநணுகி யருள் பெறவே நாடுதே
ஜெகரூபா
மோனவடிவே ஞானமுடிவே தீனின்கனியே செல்வமே
முன்னம்வருவா யருள்தருவா யெந்தன்குருவா யாகுவாய்
ஜெகரூபா
பஞ்ச வினைகள் மிஞ்சாதகற்றித் தஞ்சமருளுந் தாயஹா
பதிமக்கம்புவி சொர்க்க மெலாம்புக்க மானவா
ஜெகரூபா
பையல்துதித்தேன் சையதிமாமின் னையமகற்றியாளுவாய்
பரம் பொருளே வர மருளே யென திருளை நீக்கியே
ஜெகரூபா

செஞ்சுருட்டி—சாப்பு—ரூபகம்

கார்விரிந் தடர்முகிற்சூழ் சீர்பெருமக்காவில்வளர்
ஹுக்கனன்னபியே யுமைத் தேடுதே மன
நித்தமுமிடைந்துருகி வாடுதே
காமியாகினேன் ஹாமீமேதிரு நேமிவல்லவன் வாமசாகர
கஞ்சமதில் மஞ்சனனுடிட தரும் கஞ்சமல ரின்சாரணைகூடிட
கார்விரிந்த
காரண மதியழைத்தபூ ரணர் குபிரறைத்தான்
கொறல் செய்யுந் தீரவீர சிங்கமே யந்த
வாரணப் பொருளில் வந்த வங்கமே
கானினன்னதி தோணிடத்தரு ஞனிலகுரு ஞான போதக
காருண்ய பூரணோதய நீதமே திரு சீருலாவிய மதின கீதமே
கார்விரிந்த
நாளைமஹஷரிற்றுன்ப வேளையில் மன்முடிக்கார்க்கு
நாயக முஷ்த்தபா நபிநாதரே எங்கள்
தாயகமுகம்மதென்னு நீதரோ
நற்றவந்தரு முத்திபெற்றிட வித்தகநபி சித்தம்வைத்திடும்
நாகரீக மாதவதயாளரே தகு மேகமூலாதார வனுகூலரே
கார்விரிந்த
அங்குமிங்கு மெங்குநிறைந்தெங்கும் பிரகாசமான
வாதியில் வகுத்தவொளி நாதரே பிரக்
கியாதியாய் வந்திடு மஹமூதரே
அண்டமுங்கட பிண்டமாருத சண்டமே பிரசண்ட வுத்தண்ட
ராகியவ தீதசருதாருனி ரறு சேகியகாரண தேகரானசீர்
கார்விரிந்த
விண்ணிலமும் பொன்னிலமு மண்ணிலமெ லாம்புகழ
வித்திலோர் முத்தாகிவந்த சிங்கமே திரு
நற்றவத்தோர் போற்று மகாவங்மே
வேதமே புகழோ திடு நவ நீதரே மஹ மூதரேசதா
வேளையுமருளிடுன லின்பமே நின்னேழைமாசகற்றுமதிவிம்
கார்விரிந்த [பமே

அஞ்சலித்தே னாதரித்தாள் மஞ்சுகுடைநாயகமே
யாதியுமா னாதியுற்ற ஜோதியே ஒரு
வேதனையி லாதருளுங் கியாதியே
அய்யரே மலர்க்கய்யரே சர்வ வய்யரே புகழ்சையதிமாம்
அண்டினேனு னின்னபய மாகவே கொடும்
சண்டவினை நீக்கிடு மன்பாகவே
கார்விரிந்த

இராகம்—தேசிகம்—சாப்புதாளம்

திக்குப்புகழுஞ்செழுஞ்சுடரேதிரு மக்கம்பிறந்த முகம்மதுவே
சித்தமும் வாடுதய்யா நபியே யித்தருணங்காரய்யா [எந்தன்
தீதறவே போதமுற நாதரேவந் தாளுநீரய்யா
திக்குப்புகழு

அல்லலகற்று மருள்வடிவே சர்வ வல்லவமுற்ற முகம்மதுவே
தாதாரமேததியே நபிவுன் பாதாரமே கெதியே [நின
ஆதியருள் தூதர்மஹ மூதரெனும் நீதரே மெய்யா
திக்குப்புகழு

இன்னுந் தாமத மாகாதரசரே மன்னர்புகள் மகிடாதிபரிந்த
ஏழைக்கிரங்கிடுவாய் நபியிவ் வேளையில் வந்திடுவாய்
இத்தருணம் வித்தகரோ கத்தவிய சித்தந்தா மெய்யா
திக்குப்புகழு

சற்குருவான தயாபரரோ திருபொற்கமலவடித் துற்கருமமற
சந்ததமுமருள்வாய் நபிவுன் சந்தானமே புரிவாய்
சையதிமா மய்யமற வய்யமதிற் செய்யு நீரய்யா
திக்குப்புகழு

என்னுடனே பிறந்ததங்கை எங்கேசென்றனளோ என்ற
வருணமெட்டு

சந்ததமுமுனைப் புகழ்ந்தேன் சந்தானமருளே திரு
சந்தானமருளே அரும் சந்தானமருளே நின்
செந்தாமரைப் பொற்பதத்தைத் தேடினேனருளே [சந்

பெரும்பொருளி லரும்பொருளாய் பேணிவந்தரே இன்
னுனிலத்தவரே ஈ மானில்நின்றவரோ திரு
பெரியபுருக்கான் மறையின்முதலாய் பேசுமன்னவரே (சந்த)

அகிலமுதலந்தவனை யழியா தற்பரமே இறை
யொளிவே சிற்பரமே பெரும் வெளியே யற்புதமே திரு
வலியார் மாதுல ராகவமைந்த வருமையுற்பனமே (சந்த)

சிறந் திந்தையு நிறைந்திருளிற் செனிக்கச் செய்தீரோ ஒளி
யொளிக்கச் செய்தீரோ கண்டு களிக்கச் செய்தீரோ வெகு
தெளிவுடன்கபீ பரசனைத்தீனிற் றிருப்பி விட்டீரோ (சந்த)

கானில்நதித் தோணிடச்செய் காரணசுகமே யரு
வாரணநலமே பரி பூரணகுலமே எங்கட்
காசிம்நபியேத் தாசிநபியே யாசிநற்குலமே சந்த

தேசமுடி ராஜர்புகழ் திவ்ய மாமணியே யிறை
யானவன் றெனியே புகழ் சீர்சிந் தாமணியே போதக்
தெரியசையதி மாமுக்கருளுஞ் ஜெகவதிபதியே (சந்த)

## இராகம்—தேசிகம்—ஆதிதாளம்.

கமகமகம கமகமவெனக் கமழுநன்னபியே கஸ்தூரிக்
கமழுநன்னபியே காதவழி கமழுநன்னபியே திரு
கார்முகில்குடை யானவர் மணங் கமழுநன்னபியே [ஆகம]

குமுகுமுகுமு குமுகுமுவென குமுகுமித்திடுமே பரிமளங்
குமுகுமித்திடுமே காதவழி குமுகுமித்திடுமே திரு
குறைசியங்குல வரசனொனவே கூற்நபிஜடமே [ஆகம]

திருதிருதிரு திருவிறையருள் ஜெகவதிபதியே முகம்மது
ஜெகவதிபதியே யஹமது ஜெகவதிபதியே பலத்
திக்கும்புகழு மக்கம்பிறந்த ஹக்க னன்னபியே [ஆகம]

குருகுருகுரு குருவஹம்மது குருமுகம்மதுவே யுலக
குருமுகம்மதுவே யெல்லோர்க்குங்குருமுகம்மதுவே யொருக்
கோதில்லாத குணரகிதராந் திருமுகம்மதுவே (ஆகம)

மதினநக ரரசாண்ட மாணிக்கமணியே தீனோ
மாணிக்கமணியே காண்பீரோ மாணிக்கமணியே யவர்
மலரடியைக் கெதியென்றெல்லோர்வாழ்த்திடுமினியே [ஆகம]

நரர்பரிஜின் கரிகள்தோற்ற நான்கு மூன்றுடனே தீனோ
நான்குமூன்றுடனே காண்பீரோ நான்கு மூன்றுடனே நபி
நாயகத்தின் பிரதிபிம்ப டாலதுதிடனே [ஆகம]

வானம்புவி மலைகடலாய் வருமருவுருவே தீனோ
வருமருவுருவே காண்பீரோ வருமருவுருவே யரும்
வாக்குமனது நோக்கவறியா மாமறைமுடிவே (ஆகம)

போதமுணர்ந்த நாதர்புகழும் புண்யஜின்மயமே தீனோ
புண்ய ஜின்மயமே காண்பீரோ புண்யஜின்மயமே நின்
போதம்சையதி மாமுக்கருளும் பூரணமயமே (ஆகம)

எனைப்பாராதிருப்பதென்ன பழனியாண்டவா என்ற

## வருணமெட்டு

தாராதி ருப்பதென்னத் தாசினன்னபியே யருள் (தா)
பேரா னந்தமுடையச்சீரா ளெனக்குவருள் (தா)

சீரார்பு கழுமக்க வூரானதிலிறைவன்
நூராலு தித்திலங்குபேரா ளெனக்குவருள் (தா)

மூலக் கனலெழுப்பி காலானதை யுயர்த்தி
நாலாம்ப டிகடத்தி மேலாவி ருக்கவருள் (தா)

வாசிப் பரிநடத்தி ரேசித்துப் பூரித்திட
வூசிமுனைவாசலை நேசித் தெனக்குவருள் (தா)

ஈராறி லீரண்டையும் பேராதொ ருமித்திட
மாராய மேபுரிந்து தீராவினைதீர்த்தருள் (தா)

அம்பர த்தில்நடனம் பம்பரம் போல்நடித்து
கும்பக த்திலிருத்தி ஸ்தம்பன மாகவருள் (தா)

செய்ய திறசூலுந்தன் துய்யம லர்ப்பதத்தை
சையதிமாமுக்கருள் செய்யும்பெ ருங்கருணை (தா)

தாருனே மோரா மிட்டாய் ஜோரா என்ற

வருணமெட்டு

---

தாரு னின்பாதஞ் சதாபோதம் நபி
தாருங் கண்பாருமுன் காருனற் சீராரோ (தா)

பாரிலடியேன்ப யன்பெற வேநிதம்
பாதந்தா போதந்தா நாதர்முஹம்மதுவே (தா)

ஏதுமறியே னிறசூல்முகம்மதுவே
ஈடேற்றந் தாநாட்ட மேகாட்டி டுமெனக்கு (தா)

நாதநா தாந்தந ளினபொற்பாதரே
நாதாவந் தாதார மேதாருங் காதலித்து (தா)

அஞ்சலி செய்தேநின் றஞ்சமெ னக்கருள்
அண்டர்கள் தெண்டநிட் டென்றுந்துதிகுருவே (தா)

கன்மானு சாரக்க வலைய கற்றுமா
காசிமேத் தாசிமே மாசில்லாமாணிக்கமே (தா)

முத்திப்பிர சாதமு தலேமு மூமணியே
மோனமே ஞானமே தீனரட் சகரெனீர் (தா)

சத்துச்சித் தானந்த சார நிராதரச்
சந்தானம் வந்தேதா வெந்தன்மனமகிழ (தா)

சாயுட்சிய மேரேநின் சையதி மாமைக்கார்
தங்கமே யங்கமே யெங்கள் முஹம்மதுவே (தா)

அய்யா பழனிமலைவாசா என்ற

## வருணமெட்டு.

---

சீதசெந்தாமரைப்பூ பாதா திரு செய்யதிறசூல்ரஹ மூதா
மூதா ஜகநாதா நவநீதா சுகபாதா நீதா (சீத)
வேதமதையழைத்த போதகநற்குருவே
பூதலத் தில்நினது சாதனை தந்தருளே (சீத)
எல்லா வுலகாதி சகாயா திரு வல்லானருளியவு பாயா
உபாயா நன்னேயா தயாயா சகாயா ஞேயா (எல்)
சல்லாப மானவலி யுல்லாவின் மாதுலரோ
பொல்லாத வம்விடுத்து வல்லானைக் காணவருள் (சீத)
உன்னைய றியும்வகையாது விடங் தன்னையறியே னபியோது
ஓதுவேன் வாதுதட் சூதுநான் வீதமுற (உன்)
முன்னேயா தம்நுதலிற் பின்னேயப் துல்லாவிலும்
சொன்ன சரகுவழி யென்ன வதையருளும் (சீத)
அன்றுரைத்தவிகுததீற்க மது வின்றருளுனபி யேன்தேக்கம்
தேக்க மிலாமார்க்க மரு டீர்க்கஞ் சன்மார்க்க மூக்கம் (அ)
பண்டுநாளிலொளிவே சென்றதறிகிலேனே
கண்டறிந்திடவாரும் அண்டர் புகழ்குருவே (சீத)
வானொளிவானதுவுனீயே வனக் கானொளிவானதுவு னீயே
நீயேவருவாயே கார்ப்பாயே தீர்ப்பாயே தீயே (வா)
மானிடரி னொளிவோ நானிலத்தின்வடிவோ
ஏனையரினறிவோ தினிறசூலேயருள் (சீத)
பையலிறைஞ்சிதுதித்தேனே யினி உய்யும்படிக்கருளீ மானே
ஈமானே பூமானே கோமானே சீமானே தீனே (பை)
வையமதில்நினது துய்யமலரடியை
சையதிமாமெனது ஐயமறவருளே (சீத)

# இலாவனி—வருணமெட்டு.

இராகம்—செஞ்சுருட்டி—ஆதிதாளம்

கருணைப்பிரவாகமுள குருநபியே நினதுகாட்சிபெறவுமருளே
மூலத்தின் பொருளே யாதாரச்செயலே யடியவர்க்கு
காட்டுஞ் சுடரின்முதலே
பெருமறையினறிவே குருமார்களடிபணி பிரபலநவமணியே
மதுரக்கனியே யெனக்குவினியேதிருப்பொற்பதம்
பேணிக்கொடுக்குந் தனியே
இருவினையகற்று மாவொளிவே யெந்தன்
இருதயங்களிக்கு நற்றெளிவே
வருமிட ரதனைநற் கதிர்முகப்பனியென வாட்டியகற்றுமருளே
மூலத்தின் (1)

ஏகச்சக் ராதிபதி யாகமதினுநக ரிருந்தர சாண்ட தேசி
களையென்வாசி முடிக்கு நேசித் திரிலோகங்க
ளெங்கும்புகழ்பிரகாசி
சாகரத்ததின்மனு தடவனை ஜின்பரிகள் சகலஜீவவாதார
மானவொய்யார துஷ்டசம்கார தேயாதிபதித்
தேயத்துக்கதிகார
யூகவசிகரசிங்கார மதி யொக்குமாவடிவலங்கார
தேகஜோ சுசிகர தேஜஸே யடியார்க்கு சித்திதருனல்லருளே
மூலத்தின் (2)

மாபதி குணபதி மகிபதி யனுக்கிரக வரபதி பூபதியே
சிலாக்கியநிதியே சகாயமதியே மக்கம்பிறந்த
மாமணிதீன்கனியே
கோபதிகுணுதித குவலயநற்பதியே குறைஷியங் குலவுருவே
ஞானநற்குருவே மானிலவருவே கமகமப்புக்
கொடுக்குங் கஸ்தூரி மருவே
ஜேபதி தினகரரான எங்கள் சிற்பரம்பொருளௌவாமோன
தேபதி யானவலிதினமகிழ் மாதுல னொன் சிந்தையிற் றங்கு
மூலத்தின் [3] [மருளே

போதங்கமழபரி பூரணமேகமழ பொங்குங்கஸ்தூரிகமழ
விண்ணவர்புகழ கதிஜாமகிழ ஆயிசாநினேப்
போற்றியகமே கமழ
பாதந்தையணுகா பயஹாம்பரோயுமதுபாதமெனதுசிரமே
பொருதநிதமே புரியவிதமே பையலின்முகம்
பாத்தருளுஙன்னபயமே
சாதனேதந்தருளவேண்டும் யோக
சன்மார்க்கம்பெறவே யெஞ்ஞான்றும்
பூதலத்தினினேயே போற்றிடும் சையதிமாம் புண்ணியமுற
மூலத்தின் [4] [வருளே

அள்ளியள்ளி நீர்குடிக்கும் என்ற

## வருணமெட்டு.

---

மக்கம்பிறந்தநபி ஹக்கனற்றூதரோ
வாசங்கமழுநீதரோ மஹமூதரோ வாசம்
மண்டலமீதுசண்டனேத்தீரும் அண்டினேனும்மை யென்றுயர்
மாதவத்தோர்புகழு நாதாந்த போதமே [தீரும்
வந்துரட்சித்தாள்நீதமே தாபாதமே வந்து 1

ஆமினம்மாள்வயற்றில் ஹாமீமாய் நின்றோரோ
யலிமாமதுவை யுண்டோரோ சமர்வென்றோரோ அலிமா
அஞ்சலித்தேநின் கஞ்சமலர்த்தாட்
பஞ்சைக்கருளே மஞ்சுகுடையோர்
அண்ணல்முகம்மதென்னு ளன்னபிநாயகம்
அருளுவாய் பூரணேதயம் ஞானேதயம் அருளு 2

முத்தொளிவாயுதித்த அத்வீத ஜோதியே
மோனப்பிரகாச நீதியே யனுதியே [மோ]
மும்மலனீக்கி யிம்மையிற் காக்குஞ்
செம்மலேவாருந் திம்மையைத் தீரு
முச்சுட ராவிளைத்த விட்சத்திர சிங்கமே
மூலத்துதித்த வங்கமே மாதங்கமே மூலத்து 3

சஞ்சலிக் காதுசரந் தந்தருள் நீதமே
சப்தித் தெழும்ப நாதமே சங்கீதமே [சப்]
தாரைவாயூதி நீரணிமாலி லேறியடியேன் பூரணமாக
சைய திமாமெனக்கு மெய்ய தைத்தாருமே
சந்த தம்வந்து சேருமே கண்பாருமே [சந்] 4

இராகம்—தேசிகம்—ரூபகதாளம்.

சற்குரு பாதம்பிர சாதமென் றேமறை
சாற்றும றிவைக்கைக் கொள்மனமே [சற்]

தனியோ னருள்பெறுமொளிவாம் மணியேமுகம்மது நபியாம்
தனேயே யனுதினம்பணிவா மனமே வருமவர் குருவாம் [சற்]

அற்புத மானத யாபரரோ யரு ளானவி யாபக சாகரரோ
கற்பககாரண விற்பன்னரோதிரு காருண்ய முள்ள நற்தற்பரரோ
கருணையி னுருவென தடமேல் வருபவ ரவரடிமுடிமேல்
திருவெனவமைபிணியினிமேல் அறுனலம் பெருகிடுமினிமேல் [சற்]

சொற்கினி யநாம சுந்திர ரேசுக சோபன தூசிலாச் சந்திரரோ
நற்கிரி யைதரு ஞயகரோ நன்மை நாளும ருட்டிரு ஞாபகரோ
நாடுமவரிருகதமே தேடு மதுபெருநலமே
கூடுமருனலசுகமே பாடு மவர்திரு பதமே [சற்]

சகலபு வனசற் வேந்தீரரே நின் சையதிமாமெனே யாள்பவரோ
அகலாதிருந்தமு தூட்டுவரோயரு ளானந்தசாகரத் தாட்டுவரோ
அரசர்க் கரசெனுந்திருவே குறைசி குலநலவுருவே
பரமீ திருந்தெழுங்கருவே வரமே தருமருளறிவே [சற்]

பேகி ஆவலேவ் பாவலேவ்ஜாவோ என்ற
வருணமெட்டு
இராகம்—கவாய்—ஆதிதாளம்.

மரு மாமலர் பாதமே தாரு மஹமூதேநி ரெந்தனைக் காரும்
வயய மீதினி லென்றுயர் தீரும்மனவா தனே யற்றிடப்பாரும்
மருமாமலர்

இருமாவினை நீக்குமரூபா பூவி ரண்டி லிலங்கும்பிரஷ் தாபா
மரு ஞானம யக்கறுந் தீபா திரு வாசப்ப தந்தருநற் பூபா

மருமாம

பதிபாரும் வழியறி யேனே பாச பந்தவி னையறுந் தீனே
கதி சேரும் பதந்தெரியேனே கமழ்சிதம லர்பதந்தா கோனே

மருமாம

அரு ளானந்த சாகர மேலே யடி யேனுமு றங்காத தாலே
திரு வாகிய வுன்னிரு தாளைதருந் தீனிற சூலேயிவ் வேளை

மருமாம

எந்தன் சிந்தைக்கு றியநற் சீரோதிரு செய்யதி றசூல்மா மேரோ
பந்தம் வந்தணுகாமலேக் காரோபதி வள்ள லஹமதென் பீரோ

மருமா

தகுந்தங்க ளுதவியைக்கொண்டுநின் சாயுட்சிய முற்றிடநின்று
சதஞ்சங்கையுள வடிகண்டுவுற சையதிமாஞ்செய்தே தொண்டு

வாரிஜனு வனஜோபனு என்ற

## வருணமெட்டு

நாயகமே நபியமுதே நபியமுதே முகம்மதுவே

தாயக மான தயாபரனே மா தயாபரனே தயாபரனே

நாயகமே

அனுதினம்பாடி யருளுறநாடி யடிபணிந் தேனே யஹமதுவே
நணுகினேனுனே நயம்பெறதானே நன்னயகமே நபிநாயகமே

நாயகமே

தேசசொரூபாஜின் மயவரூபா திகழுமணியே முஹம்மதுவே
வாசனே வந்தடியேனையி ரட்சியும் வள்ள லஹம்மது நாயகமே

நாயகமே

காணவுருவ ங்கருணைவை தீபப்பிரகாசமெனச்சுடர்வீசிடவே
நாணவி ராகாதி வேகிட வுமருள் நாயகமேயா முஹம்மதுவே

நாயகமே

அண்டினேனேழை அருளுமுன்றாளை யகுமதுவேமுகம்மதுவே
ஐயனேசையதிமாமுனையேத்தினே னுதரித்தாளு முகம்மதுவே

நாயகமே

சன்முகனே யின்னுமிறக்க மிலேயா என்ற

## வருணமெட்டு.

நல்மணமு ஹம்மதே யஹம்மதுவே [நல்]
வல்வினைதீர் மாமணியே மாமணியே மாமணியே [நல்]

தொல்பூவில் நொந்தே நொந்தே நொந்தே னெந்தனை
நல்லருள்சதம் நாடிடப்பதம் தாபதம் பதம் பதம் பதம் [நல்]

பந்தமிரு ளுந்துலேய வுந்தனருள்
தந்து வதனஞ் சாரூபங் தினங் தாதினங் தினங் தினங் தினம்

ஆதரவி லாதகொடு பூதலத்தை [நல்]
பேதமேதிடம் பெற்றிடசடம் தாசடம் சடம் சடம் சடம் [ந]

மாமறையின் வாமமருள் கோமளரோ
நேமமேதிறம் நேசித்து சரம் தாசரம் சரம் சரம்சாரம் [நல்

கொந்தலரும் நந்தவன முந்திரமும்
அந்தமாமதி னந்தனிற்பதி யேபதி பதி யதிபதி [நல்

வையமதிற் சையதிமா முய்யுவிதம்
ஐயரேயரு ளாதியின்பொரு ளேயரு ளரு ளரு ளருள் [நல்

சாண்டோ சாண்டோரோ ஹறியாம் என்ற

## வருணமெட்டு.

கதிர் மதியேமா தங்கம் வா ஹாமீமே (கதிர்)

பதியே மதினா வின் பாராளு னீதரோ
துதியே பெருமறையின் ஜோதி நாதரோ (கதிர்)

காருண் யமான கருணாக ராதிபா
பாரி லடியே னேக்கண் பாரு மாதயா (கதிர்)

ஆசிங் குலமே யப் துல்லாவின் பாலரோ
காசி னபியேவா வாச லோலரோ (கதிர்)

பையலி றஞ்சினேன் பாராள் பிரகாசமே
சையதி மாமுமது தஞ்சங் தஞ்சமே (கதிர்)

செந்திமா நகரந்தனில் மேவிய என்ற

## வருணமெட்டு

மக்கமா நக ருக்கர சாகிய வாசங் கமழ்மஹ மூதே இந்த
தேசமெ லாம்புகழ் சாதே திரு
மன்னரும்பருனன்னயமுட னெண்ணுமேதுதிபண்ணுந்தேசிக
வள்ளலே யரு ளுள்ளவ ஜீகர மாதவ மேவா மீயும் எந்தன்
தீதறவேயருள் பேயும்

மாயையால்படுந்தீயனுகாதுவென் வாமமடையதுபாயஎழுந்
சோமனு தயாதி சாயத் தரும்
வஞ்சமின்றுநின் றஞ்சமேபுரி பஞ்சபாதக னஞ்சலித்தனன்
வாரியே சுகபேரின்ப மேதிறள் மௌனநிராமயவாழ்வே திரு
கௌனுதி போற்றுமா மேர்வே (2)

வானவர் துதி தீனத யாளரோ வான்கரு ணைமுகிற் சீரோ நினை
யான்புகழ்ந் தேன்கண்ணுல் பாரோ கொடு
வண்டனாவலிகொண்டறுத்திடுமண்டர்மாபதி நின்சரண்புகும்
வண்ணமேயருளின்னுமேன்தாமதம்மானிலத்தாகியபாவியுனை
பேணிப்பு கழ்ந்தேனே மேவி (3)

தங்கமே ரச மங்கத்தி ருத்துனல் சர்வ ஜெகத்குருவாழ்வே
வறுமைய றுமகா மேர்வே இது [யுறும்]
ததியில்வந்தருளதிபருன்னடி கெதியலாதுவேதிதுபுவிதனில்
தஞ்சமேயுறகிஞ்சிற்று மாகிடாதாகையா லென்கரம்பற்றிவிட
லாகாத ருள்தரும் நத்தி (4)

திமிர்தசா கர வமிர்தமீயு னய ஜின்மயானந்தஹாமீமே நின்
உண்மைய ருளுங்கா சிமே திரு
சீருலாவிய பேரு றுமதி னுவி னின்முத லானதேசிக
செய்யதே பையல் சையதிமாமினி சீரடி யிலுறப்பாரும் திரு
றாரொளி யீந்தகங் கூடும் (5)

இராகம் தேசிகம்—ஆதிதாளம் பனுக்காசாமஹைறத்தேரிஎன்ற

வருணமெட்டு

நபியே நாயகதீனே நின்பாதம் நாடினேன் யானே
ஹபீபே மோகமானேனே என்மேலிம் மோடிசெய்வானே [ந

சம்சார சாகரத்தின்பந் தனிலே யாகாது துன்பம் விடுத்து
யோகபேரின்பந் தனையன் பாயருள்தம்பம் [நபி

வேதாந்த வித்தே சாகரமே பேரின்ப முத்தாம்சரசமே
போதமே சத்தே நிர்மலமே தந்தாளும் சாயுக்ஷ்யபதமே [ந

காரண காக்ஷியின் பலனே ஹபீபுன் னூட்சியின் றிடனே
பூரண சாக்ஷியே மடனே கண்பாரு மாட்சிமை யுடனே [நபி

மதின மாபதிமதியே மக்காவின் சோபனநிதியே
வதன பூபமோ ததியே யுமையில் லேதுநற்கெதியே [நபி

காமிநான் வாமமே தெரிய நின்னருள் நேமமே பொழிய
ஹாமீமே தாமத மொழிய வந்தாலுன் நாமமே செழிய [நபி

தாசனு னஞ்சலித்தேனே எந்தன்மேல் வஞ்ச கமேனே
நபிவுன் றஞ்சமானேனே கண்பாருங் கெஞ்சினேன்யானே (ந)

தாசனுன் சையதிமாமின் வறுமைக் கொய்யு மேதினின்
சுடறுன் றுய்ய மாமலரின் னடிதா மெய்ய ரேயடியேன் (ந)

நொண்டிச்சிந்து.

முத்திக்குவித் தான நபியே—எங்கள்
முஹம்ம திறசூலெனுமோன மணியே
அத்துவித சித்து ருவமே—நல்ல
ஆதியும னாதியான அகமியமே

முந்தியநோஃ தாகிய தீனே—அதின்
மூல மலீப்லாமீமெனு முச்சுடர்தானே
பிந்திமயில் வடிவாகி—இச்சிறந்த
பேருலக வண்டபிண்ட பேதமுமாகி

நின்றிடச்செய் தானே றகுமான்—தங்கள்
நேர்மை யும்பாண் மையுஞ்சொல்ல வல்லத்தகுமா
என்றிசையும் புகழ் திருவே—யெனக்
கீடேற்றந் தருங்குரு வான கருவே

ஆதமுத னுதலில் னின்று—பின்பு
ஐம்பத் தொரு தலைமுறை யாகவே கண்டு
நாதராமப் துல்லா நுதலிற்—றங்கி நின்று
நானிலத்தி லாமினம்மாள் கெற்பவறையில்

மாணிக்கத்தீ பம்போ லுதித்து—சீர்திருநன்
மாதமொறு பத்துஞ்சென்று போதமுறவே
நானிலம்பு கழப் பிறந்த—முஸ்தபாநபி
நாயகரா ஜமுஹம்ம திறசூலே

தீன்கு லஞ்செ ழிக்கப் பிறந்த—தேசோமய
சிற்பரமே யற்புதமே பொற்பா தந்தனை
யான்சிர மேற் றிடக் கருணை—புரிந்துநின
தழகான தெரிசன மிலங்கிடவே

சந்த தம ருளுந் திருவே—யடியேன்பவந்
தழ லின்மெ ழுகதுபோ லகன்றிடவே
வந்தெனை ர க்ஷியு மொளிவே—கஸ்தூரியதின்
வாசம் பிர காசமுட னுசையுடனே

மாசற் றபெ ரியபுறுக் கான்—மறைபுகழும்
வல்லோ ரோஸல் லல்லாஹு—வ லைஹிவ ஸல்லமே
தாசன் சைய திமா மெனக்கு—திருப்பொற்பதம்
தந்த ருள்தெ ரிசனமுஞ் சந்த தமுற

முத்திக்கு

---

## இராகம்-தோடி-ரூபகதாளம்

சீர்திருநிறையிறையருவினிலுருவெனவருந்தீன்மணிமஹமூதே
திகழும் புகழும் நிகழும் கமழும் சீர்திரு

சித்தர் கள்பணிமுத்திய ருள்பீரா சுத்தகு ணகரா
பக்தர்நி ராதரா கத்தவிய பரா கருணகரா (சீர்திரு)

ஆதிய றுசேறி வந்தவரோ இருள் கோதிட வேமதி தந்தவரோ
ஞான முந்தவரோ மாசு கந்தரரோ தீனு கந்தவரோ
யருவா யுருவாய் குருவாய் திருவா
அறிவாய் மருவாய் ஒருவாய் வருமா னந்தரரோ
இறுலோகமெ லாந்துதி யுந்திரரோ (சீர்திரு)

மாதலி மாமது வுண்டவரோ யரு மாமறை யின்சீராய்நின்றவரோ
சமர் வென்றவரோ புக ழுண்டவரோ பிணை நின்றவரோ
மகத்து விகத்து தகத்து ஜகத்து
வழுத்துமுதித்துகதித்துலாவு மனோமணியேசீர்சிந்தாமணியே
மகிதலமெ லாம்பு கழுங்கனியே (சீர்திரு)

அட்டதிக்கும்பணியாரணரேதிருவப்துல்லாநற்றவத்தானவரோ
பரிபூரணரோ சர்வ காரணரோ எங்கும் வீரணரோ
அறத்தில் திறத்தில் நிறத்தில் புறத்தில்
கரத்தில் பரத்தில் வரத்தி லுயர்ச தாரணரோ
அன்பன் சையதிமாமெனைக் கார்ப்பவரோ (சீர்திரு)

## இந்துஸ்தானி-பியாக்கு-ரூபகம்.

ஆட்ட மாடுது பாரு வம்பரமேறு வதுதான் பதிசேரு

காட்டிலலைந்துக் கடுந்தவஞ்செய்தாலுங் காட்சியடைவதில்லை
நாட்டிடு வாய்தில்லில் கேட்டு குருவிடம் நஸ்டமுமக்கதில்லை
ஆட்டம்

ஆதிலலாடத் தமைந்தபிராண னதுசித்ர நாடியிலே வந்து
மோ மூ லாதார மோமென் றுதித்தது முட்டிடநா பியிலே
ஆட்டம்
நாபியில் ரீமென்று முட்டியிருகலே நாசிவ ழியோடுதே யதை
சோபித லாய்விடா துள்ளேநீ வாங்குசுளிமுனை மேலாகுதே
ஆட்டம்
முந்தியாருதார மூலங் கடந்துமேல் முட்டுவாய் ரீமென்றுரை
வுந்திவிட் டேயறு கோணங்கடந்து உலாவி யவ்விடம் நிறை
ஆட்டம்
சந்திரமண்டலந்தன்னிலமிர்தம் சரமாரியாய்ப்பொழியும் இவ்
வந்திாமீது வறியாதுழண்டு வவதியேனோ மொழியும்
ஆட்டம்
ஆனந்தத்தே னையருந்திச்சிரஞ்சீவி யாகலாஞ் சீக்கிரத்தில்
ஞானமிதுவே நரகமேயில்லையெங் நாளுஞ்சுவர்க்கத்தினில்
ஆட்டம்
நெத்திபுருவத்தின் மத்தியிலேதீபம் பத்தியெரியுதென்றே
கத்திடுதேவேத னத்திடுவாயதைக் கஷ்டமில்லாது நன்றே
ஆட்டம்
சையதிமாமுனை யய்யமில்லையதை மெய்யெனவேயறிந்து
வய்யகத்தினில் வாசியிலேறியே வாழ்குவீரே தெரிந்து
ஆட்டம்

இராகம்—கேதாரகௌளம்—சாப்புதாளம்

பூரணச்சந்திர கதமே நிதமே நம்பினேன்
புகழ்ந்தேனே யடியேனே கந்தங் காதங் கமழும் (பூ)
ஆரண மணியே யஹமதுக் கனியே யாமீனாீன்ற
அழகே ஞானத்தின் பொருளே ஹக்கருளே
கந்தங் காதங் கமழும் (பூ)
மாமறைப் பொருளே மானிலவருளே மகிழ்மதினா
மகுடாபிசேக பதியே நின்கெதியே கந்தம்
ஆசீனற் குலமே யதீதஜின் மயமே யஞ்சலிசெய்தே
ஞளுமி துசமயமே நற் சுகமே (கந்)
ஐந்தெழுத் துருவா யகிலநற் குருவா யாதியில் றப்பன்
அழகுமங் களரூபமாய் சிற்பரமாய் (கந்தம்)

எங்கும்பி ரசங்க வெழிலதுதங்க இலங்குமக்கா
புறமே மர்ந்து துலங்க சீர்பொங்க (க

நாயக மேரோ நன்பனுன்சீரோ நாடினேனருள்
புவியிலெனதுவறிவே சற்குருவே (கந்

சகலலோ காதி சர்வாங்திரியாதி சராசரமுஞ்
சமைந்த சம்பன்ன கியாதி சர்வஜோதி (கந்

சாயுட்சியம் பெறவே நின்னருளது தரவே சையதிமாமுன்
சரணுகெதியைப் பெறவே முன்வரவே (கந்

ஜானகி—ராமண—என்ற வருணமெட்டு.

நாயக நபியே நந்து லவுஞ் சோலைசூழ் மதின
நாதா காரநற் போதா மிர்தந்தா மேதாவிபுகழ்

தூய சச்சிதானந்த மேயருஞ் சுடரோ யத்வீதஜோதியேயி
தூதா ங்கர்மஹ மூதா சீர்பெறும் நாதா வந்தருள்

ஆதியில் ஜப றாத்திற் புராவடி வாகியே மயிலான சர்வா
ஆசிம் நற்குலக்காசீம் மாநபித் தாசீம்வந்தருள்

அருணன்டாலுறு மப்துல்லாமக வானமாமணியே யருட
ஆகா துகொடு மோகாதியற யோகாதியருள்

மாசிலாத வடிவே சையதிமாம் மானிலத்துறுஞ் சாதனம
வாதே தேதுவொவ் வாதே நன்னபி நாதேவந்தருன்

வாழிவாழிபிவ் வையகம்வாழி மன்னன்சேக்கிசு மாலும்வா
வாழிவாசிங்பர் வாழிகேட்பவர் வாழியேயருள்

இரஞ்சித பதகீர்த்தனமிர்தம்

